[ப-உ] நின்று - நிலைத்து, தளரா - சோர்ந்துவிடாமல், வளர்-வளர்கின்ற, தெங்கு - தென்னை மரமானது, தாள்உண்ட - தனது அடியினால் குடித்த, நீரை - தண்ணீரை, தலையாலே - தனது முடியினால், தருதலால் - (மிக்க சுவையுள்ள இளநீராக்கிக்) கொடுத்தலால், ஒருவற்கு-ஒருவனுக்கு, நன்றி செய்தக்கால் - உபகாரத்தைச் செய்தால், அந் நன்றி - அவ்வுபகாரத்தை, என்று தருங்கொல்-அவன் எப்போது திருப்பிக் கொடுப்பான், என வேண்டா - என்று நீ நினைக்க வேண்டியதில்லை.

[க-உ] நல்லோருக்குச் செய்த உதவி சிறந்த வகையில் பயன் படும். ஆகையால் அவ்வுதவியின் பயனை நீ எண்ணாதே.

தென்னை மரம் அடியால் உண்டது தண்ணீர்; அது முடியால் கொடுப்பது, மதுரம் பொருந்திய இளநீர். தான்—அசை நிலை.

**நல்லோர்க்குச் செய்த உபகாரம் அழியாது**

**2.** நல்லா ரொருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மே லெழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மே லெழுத்திற்கு நேர்.

[ப-உ] நல்லார் ஒருவர்க்கு - நல்லவர் ஒருவருக்கு, செய்த உபகாரம் - செய்த உதவியானது, கல்மேல் எழுத்துப்போல் - கருங் கல்லின்மேல் செதுக்கப்பட்ட எழுத்தைப் போல, காணும் - என்றும் அழியாமல் விளங்கும்; அல்லாத - நல்லவரல்லாத, ஈரமிலா - அன்பில்லாத, நெஞ்சத்தார்க்கு - மனமுடையவருக்கு, ஈந்த உபகாரம் - செய்த உதவியானது, நீர்மேல் எழுத்திற்கு - நீரின்மேல் எழுதப் பட்ட எழுத்திற்கு, நேர் - சமானமாகும்.

[க-உ] நல்லவருக்குச் செய்த உபகாரம் எக் காலத்திலும் அழியாமல் விளங்கும்; தீயவர்க்குச் செய்த உபகாரம் அப்பொழுதே அழிந்துவிடும்.

**இளமையில் வறுமையும் முதுமையில் செல்வமும்**

**3.** இன்னா இளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னா அளவி லினியவும் இன்னாத
நாளல்லா நாட்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு.

[ப-உ] இளமை - இளமைப் பருவத்தில், வறுமை - தரித்திர மானது, எய்தியக்கால் - வந்தடைந்தால், இன்னா - அது துன்பத் தைத் தருவதாகும்; இன்னா அளவில் - முதுமைப் பருவத்தில், இனியஉம் - இனியனவாகிய பொருள்களும், இன்னாத - துன்பதைத் தருவனவாம்; (அவை) நாள் அல்லா நாள் - (சூடுதற்குரிய) கால மல்லாத காலத்தில், பூத்த நல் மலரும - மலர்ந்த நல்ல மலரையும், ஆள் இல்லா மங்கைக்கு - கணவனில்லாத பெண்ணுக்கு, அழகு-அழ கையும், போலும் - ஒக்கும்.

ஏ - அசை; அழகும் என்பதில் உள்ள உம்மை தொக்கது.

[க-உ] இளமையில் வந்த வறுமையும் முதுமையில் வந்த செல்வமும் மிக்க துன்பத்தை விளைவிப்பனவாகும்.

**மேன் மக்கள் தன்மை**

4. அட்டாலும் பால்சுவையிற் குன்று தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

[ப-உ] பால் - பாலே, அட்டாலும் - காய்ச்சினாலும், சுவையில் குன்றாது - அது இனிய சுவையில் குறைவு படாது; சங்கு - சங்கை, சுட்டாலும் - கொளுத்தினாலும், வெண்மை தரும் - வெண்ணிறத் தையே கொடுக்கும் (அவை போல) மேன் மக்கள் - மேலோர்கள், கெட்டாலும் - வறுமையை அடைந்தாலும், மேன் மக்களே - மேலோராகவே விளங்குவர்; நண்பு அல்லார் - நட்பின் குணமில் லாத கீழோர், அளவளாய் நட்டாலும் - நெருங்கிப் பழகினாலும், நண்பு அல்லர் - நண்பர் ஆகார்.

[க-உ] மேலோர், வறுமையிலும் மேன்மை யுடையவராகவே விளங்குவர்; கீழ்மையை யுடையவர் எவ்வளவு பழகினாலும், நண் பராகார்.

**எக் காரியமும் முடியும் காலத்தில்தான் நடக்கும்**

5. அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

[ப-உ) தொடுத்த - கிளைத்த, உருவத்தால் - வடிவத்தால், நீண்ட - நீண்டுள்ள, உயர்மரங்க ளெல்லாம் - உயருகின்ற மரங்கள் யாவும், பருவத்தா லன்றி - பழுக்குங் காலத்தி லல்லாமல், பழா - பழுக்காவாம்; (அதுபோல) அடுத்து முயன்றாலும் - தொடர்ந்து முயற்சி செய்தாலும், ஆகும் நாளன்றி - முடியுங்காலம் வந்தா லல்லாமல், எடுத்த கருமங்கள் - மேற்கொண்ட காரியங்கள், ஆகா - முடியாவாம்.

[க-உ] தொடர்ந்து முயற்சி செய்தாலும் ஒரு காரியம் முடிகிற காலத்தில்தான் முடிவடையும்.

**உயிரைக் காட்டிலும் மானம் பெரிது**

6. உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்.

[ப-உ] கல் தூண் - கருங்கல்லால் செய்யப்பட்ட தூண், பெரும்பாரம்-பெரிய பாரத்தை, தாங்கின்-தாங்கினால், பிளந்து இறுவது அல்லால் - பிளந்து முறிந்திடுவ தல்லாமல், தளர்ந்து-தளர்வுற்று, வளையுமோ - வளைந்திடுமோ; (அது போல) உற்ற இடத்தில்-மானக் கேடு உண்டான இடத்தில், உயிர் வழங்கும் தன்மையோர்-தமது உயிரை விடும் குணமுடையோர், பற்றலரை - பகைவரை, கண்டால் - பார்த்தால், பணிவரோ - வணங்குவாரோ? (வணங்கார்) ஓ இரண்டும் எதிர் மறை. தான் - அசை.

[க-உ) மானமுடையவர் தமக்கு ஒரு ஆபத்து வந்தபோது, உயிரை விட்டாலும விடுவரே யல்லாமல் தமது மானத்தை விடமாட்டார்.

**அறிவு, செல்வம், குணம் அமையும் பான்மை**

7. நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுங் குணம்.

[ப-உ] நீர் ஆம்பல் - நீரிலுள்ள ஆம்பல் மலரானது, நீர் அளவே ஆகும் - நீரின் உயரத்தின் அளவாகவே யிருக்கும். (அது

போல) நுண்அறிவு - கூரிய அறிவானது, தான் கற்ற - ஒருவன் படித்த, நூல் அளவே ஆகும் - நூல்களின் அளவாகவே அமையும்; தான் பெற்ற செல்வம் - ஒருவன் அடைந்த செல்வமானது, மேலே -முற்பிறப்பில் செய்த, தவத்தளவே யாகும் - தவத்தின் அளவாகவே அமையும்; குணம் - ஒருவனுடைய குணம், குலத்தளவே - அவனுடைய குடியின் அளவாகவே, ஆகும் - அமையும்.

இங்குக் குலம, ஒருவனுடைய குடிப் பிறப்பை உணர்த்தியது.

[க-உ] ஒருவனுக்கு அறிவு அவன் கற்ற நூலின் அளவாகவும், செல்வம், அவன் செய்த தவத்தின் அளவாகவும், குணம் அவன் பிறந்த குடியின் அளவாகவும் அமையும் என்பது கருத்து.

**நல்லார் இணக்கத்தின் நலம்**

8. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று.

[ப-உ] நல்லாரை - நற்குணமுடையவரை, காண்பதுவும் - பார்ப்பதுவும், நன்றே - நல்லதே; நல்லார் - நல்லவருடைய, நலம் மிக்க - நன்மை மிகுந்த, சொல் - சொல்லை, கேட்பதுவும் - கேட்டலும், நன்றே - நல்லதே யாகும்; நல்லார் - நல்லவருடைய, குணங்கள் - குணங்களை, உரைப்பதுவும் - பேசுதலும், நன்றே-நல்லதே; அவரோடு - அந் நல்லவருடன், இணங்கி இருப்பதுவும் - கூடி யிருப்பதுவும், நன்று - நல்லதேயாகும்.

[க-உ] நல்லவரைக் காண்பதும், அவர் சொல்லைக் கேட்பதும், அவர் குணங்களைப் பேசுவதும், அவரோடு கூடி யிருப்பதும் ஒருவர்க்கு நன்மையைத் தரும்.

**தீயார் இணக்கத்தின் தீமை**

9. தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே அவரோ

[ப-உ] தீயாரை - தீக் குணம உடையவரை, காண்பதுவும்- பார்ப்பதும், தீதே - தீயதே; திருஅற்ற - மேன்மை யில்லாத,

தீயார் சொல் - தீயவருடைய சொற்களை, கேட்பதுவும் - கேட்டலும், தீதே-தீயதே. தீயார் - தீயவருடைய, குணங்கள் - குணங்களை, உரைப்பதுவும் - பேசுதலும், தீதே - தீயதே; அவரோடு - அத் தீயவருடன், இணங்கி இருப்பதுவும - சேர்ந்திருப்பதும், தீது-தீயதே யாகும்.

[க-உ] தீயவரைக காண்பதும் அவர் சொல் கேட்பதும் அவர் குணங்கள் உரைப்பதும், அவரோடு கூடி யிருப்பதும் ஒருவருக்குத் தீமையைத் தருவதாகும்.

நல்லார் ஒருவரால் எல்லாருக்கும் நன்மை

10. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லா ரொருவ ருளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை.

[ப-உ] நெல்லுக்கு - நெற் பயிருக்கு, இறைத்த நீர் - இறைக்கப்பட்ட நீர், வாய்க்கால் வழி ஓடி - கால்வாய் வழியாகச் சென்று, ஆங்கு - அவ்விடத்திலுள்ள, புல்லுக்கும் - புற்களுக்கும், பொசியும் - கசிந்தூறும்; (அதுபோல்) தொல் உலகில் - பழமையாகிய இவ்வுலகில், நல்லார் - நல்லவர், ஒருவர் உளரேல் - ஒருவர் இருப்பாராயின், அவர் பொருட்டு - அவர் நிமித்தமாக, எல்லார்க்கும் - யாவர்க்கும், மழை பெய்யும் - மழையானது பெய்யும்.

ஏ, ஆம் இரண்டும் அசைகள்.

[க-உ] உலகில் நல்லவர் ஒருவர் காரணமாக எல்லோரும் பயனடைவர்.

துணையின் பெருமை

11. பண்டு முளைப்பது அரிசியே யானும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்ற லுடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல்.

[ப-உ] பண்டு முளைப்பது — (உமி நீங்குவதற்கு) முன்பு முளைப்பது, அரிசியே யானும் - அரிசியே யாயினும், உமிவிண்டு போனால் - உமி நீங்கிப் போனால், முளையாது - (அவ்வரிசி) முளைக்காது; (அதுபோல) கொண்ட - பெற்ற, பேர் ஆற்றல் - பெரிய

வல்லமையை, உடையார்க்கும் - உடையவர்களுக்கும், அளவு இன்றி- துணை யில்லாமல், ஏற்ற கருமம் - மேற்கொண்ட காரியத்தை, செயல் ஆகாது - செய்து முடித்தல் முடியாது. அளவு - துணை.

[க-உ] பெரிய வல்லமையுடைவர்களுக்கும் தாம் மேற்கொண்ட காரியத்தை ஒரு துணை இல்லாமல் செய்து முடித்தல் அரிதாகும்.

உருவு கண்டு மதித்த லாகாது

12. மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல் பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.

[ப-உ] தாழை மடல் பெரிது - தாழம் பூவின் இதழ் பெரியதா யிருக்கின்றது; மகிழ் கந்தம் இனிது - மகிழம்பூ (இதழால் சிறிய தாயினும்) மணத்தினுல் (அத் தாழம்பூவினும்) இனிதா யிருக்கின்றது; கடல் பெரிது - சமுத்திரம் பெரிதா யிருக்கின்றது; மண் நீரும் ஆகாது - (ஆயினும் அதிலுள்ள நீர் உடம்பின் அழுக்கைக்) கழுவு தற்குரிய நீருமாகாது; அதன் அருகே - அதன் பக்கத்தில் (சுரக் கும்), சிற்றூறல் - சிறிய ஊற்று நீர், உண் நீரும் - குடிக்கத் தக்க நீரும், ஆகி விடும் - ஆகும்; (ஆதலால்) உடல் சிறியர் - உருவத்தால் சிறியவர், என்றிருக்க வேண்டா - என்று மதியாதிருக்க வேண்டா.

மண்ணுதல் - கழுவுதல்.

[க-உ] சிறியவர் பெரியவர் என்பதை நாம் உருவு கண்டு மதிக்க முடியாது.

மரத்திற்குச் சமானமாவார்

13. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டாதவன் நல் மரம்.

[ப-உ] கவை ஆகி - கிளைகளை யுடையனவாகியும், கொம்பாகி - கொம்புகளை யுடையனவாகியும், காட்டு அகத்து நிற்கும் - காட்டி னுள்ளே நிற்கின்ற, அவை - அந்த மரங்கள், நல்ல மரங்கள் அல்ல- நல்ல மரங்கள் ஆகா; சவை நடுவே - கற்றோர் சபையின் மத்தியில், நீட்டு ஓலை - (ஒருவர்) நீட்டிய ஓலையை, வாசியா நின்றான் - வாசிக்க

மாட்டாமல் நிஷ்றவனும், குறிப்பு - பிறர் குறிப்பை, அறியமாட்டா தவன் - அறிந்துகொள்ள முடியாதவனும், நல் மரம் - நல்ல மரங் களாம்.

[க-உ] படிக்கத் தெரியாதவனும் குறிப்பறியாதவனும் மரங் களுக்குச் சமானமாவார்கள்.

கல்லாதவன் கற்றவனைப்போல் நடித்தல்

14. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

[ப-உ] கல்லாதான்- (கற்க வேண்டிய நூல்களை முறையாகக்) கல்லாதவன், கற்ற கவி-(கற்றோரிடம்) ஒரு கவியைக் கற்றுக்கொண்டு சொல்லுதல், கானம் மயிலாட - காட்டிலுள்ள மயில் (தனது அழகிய கலாபம் விரித்து) ஆட, கண்டு இருந்த வான்கோழி - அதைப் பார்த்துக்கொண் டிருந்த வான்கோழியானது, தானும் அதுவாகப் பாவித்து - தன்னையும் அம் மயிலென மதித்துக்கொண்டு, தானும் தன் - தானும் தனது, பொல்லாச் சிறகை - அழகற்ற சிறகினை, த்து ஆடினால் போலும் - விரித்து ஆடுவதை ஒக்கும்.

(க-உ). கல்லாதவன், கற்றவனைப் போல் நடிப்பதால் கற்றவ னாகான்.

தீயவருக்கு உதவுதல் தீங்கையே பயக்கும்

15. வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகாரம் ஆனாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மே லிட்ட கலம்.

[ப-உ] வரி - வரிகளையுடைய வேங்கைப் புலி - வேங்கைப் புலியின், நோய் - விட நோயை, தீர்த்த - போக்கிய, விடகாரி-விட வைத்தியன், ஆங்கு - அப்போதே, அதனுக்கு - அப் புலிக்கு, ஆகாரம் ஆனால் போல் - இரை யானால் போல, பாங்கு அறியா - நன்றியை யறியாத, புல் அறிவாளர்க்கு - அற்ப அறிவினர்க்கு, செய்த உபகா ரம் - செய்யப்பட்ட உதவி, கல்லின் மேல் இட்ட கலம் - கல்லின்

மேலே போட்ட மண் கலம் போல் அழிந்து, துன்பத்தை விளை விக்கும்.

[க-உ] தீயவர், தமக்கு உபகாரம் செய்தார்களே என்பதை யும் பாராமல் அவ் வுபகாரிகளுக்கே தீங்கு செய்வர்.

அடக்கமுடையார் இயல்பு

**16. அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணி**
**கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்**
**ஓடு மீன் ஓட உறுமீன் வருமளவும்**
**வாடி யிருக்குமாம் கொக்கு.**

[ப-உ] கொக்கு - கொக்கானது, மடைத் தலையில் - நீர் மடை யில், ஓடு மீன் ஓட - ஓடுகின்ற சிறுமீன்கள் ஓடிக்கொண்டிருக்க, உறுமீன் - (தனக்கு இரையாதற்குரிய) பெரிய மீன், வரும் அளவும் - வருகின்ற வரையிலும், வாடியிருக்கும்-சோர்ந்திருக்கும், (அதுபோல) அடக்கம் உடையார் - அடங்கி யிருப்பவரை, அறிவு இலர் - (அங்ங னம் அடங்கி யிருப்பதினாலேயே) அறிவு இல்லாதவர், என்றெண்ணி - என்று நினைத்து, கடக்க-(அவ் வடக்க முடையாரை) வெல்லுவதற்கு, கருதவும் வேண்டா - நினைக்கவும் வேண்டுவதில்லை.

[க-உ] ஒருவர் அடக்கமா யிருப்பதைக் கண்டு அவரை அறிவில் லாதவர் என்று கருதி வென்றிட நினைத்தால், கேட்டினைப் பயக்கும்.

உண்மை உறவினர்

**17. அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவை போல்**
**உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்**
**கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே**
**ஒட்டி யுறுவார் உறவு.**

[ப-உ] அற்ற குளத்தின்-நீர் வற்றிய குளத்திலிருந்து, அறு- நீங்கிச் செல்கின்ற, நீர்ப் பறவை போல்-நீரில் வாழும் பறவைகளைப் போல, உற்றுழி-(வறுமை) வந்தபோது, தீர்வார் - விட்டுப் பிரிகின் றவர், உறவு அல்லர் - உறவினர் ஆகார்; அக்குளத்தில்-அந்தக் குளத் திலுள்ள, கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போல - கொட்டிக் கிழங்கும் அல்லியும், நெய்தலும் போல, ஒட்டி உறுவாரே-சேர்ந்து ...ப துன்பங்களை அநுபவிப்பவரே, உறவு - உறவினராவார்.

போலவே என்பதிலுள்ள ஏகாரத்தை உறவார் என்பதனுடன் சேர்த்துக் கொள்க.

[க-உ] வறுமை வந்தபோதிலும் உடனிருந்து துன்பத்தை அனுபவிப்பவரே உண்மையில் உறவினர் எனப்படுவார்.

### மேலோர் கெட்டாலும் மேலோரே

**18. சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர்மற்**
**றல்லாதார் கெட்டாலங் கென்னாகும்—சீரிய**
**பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகு மென்னாகும்**
**மண்ணின் குடமுடைந்தக் கால்.**

[ப-உ] சீரிய-சிறந்த, பொன்னின் குடம்-பொன்னால் செய்யப்பட்ட குடம், உடைந்தால் - உடைந்தாலும், பொன்னாகும் - பழைய பொன்னேயாகிப் பயனைத் தரும், மண்ணின் குடமுடைந்தால்-மண்ணால் செய்யப்பட்ட குடம் உடைந்தால், என்னாகும்-என்ன பயன் தரும்? (அதுபோல) சீரியர் கெட்டாலும் - மேலோர் வறுமையால் தாழ்வடைந்தாலும், சீரியரே-மேன்மையான குணமுடையவராகவே விளங்குவர்; சீரியரல்லாதார்-கீழ் மக்கள், கெட்டால்-வறுமையால் தாழ்வுற்றால், அங்கு-அப்போது, என்னாகும்-அவர்களுடைய குணம் யாதாகும்.

மற்று, அங்கு-அசை நிலைகள், உடைந்தாலும் என்பதில் உள்ள உம்மை தொக்கது.

[க-உ] வறுமை வந்த காலத்திலும் மேன்மக்கள் தங்கள் நிலையிலிருந்து தாழமாட்டார்கள்.

### விதியின்படியே நடக்கும்

**19. ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்**
**நாழி முகவாது நானாழி—தோழி**
**நிதியும் கணவனும் நேர்படினும் தந்தம்**
**விதியின் பயனே பயன்.**

[ப-உ] ஆழ்கடல் நீர்-ஆழ்ந்த சமுத்திரத்தின் நீரை, ஆழ அமுக்கி-அழுந்தும்படியாக அமுக்கி, முகக்கினும்-மொண்டாலும், நாழி-ஒருபடியானது, நால் நாழி-நான்கு படி நீரை, முகவாது-மொள்ளாது; (அது போல) தோழி-தோழியே, நிதியும் கணவனும்-(பெண்களுக்குச்) செல்வமும் நல்ல நாயகனும், நேர்படினும்-நே

தாலும், தம்தம்-அவரவருடைய, விதியின் பயனை பயன்-ஊழின் அளவாகிய பயனே, (அவர்களால் அநுபவிக்கப்படும்) பயனாகும். (தோழி—மகடூஉ முன்னிலை.)

[க-உ.] ஒரு பெண்ணுக்குச் செல்வமும் நல்ல கணவனும் வாய்த்த போதிலும் விதியின்படியேதான் அநுபவிக்கப்படும் பயன் பொருந்தும்.

### சகோதரரும் எமனாவார்

20. உடன் பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன் பிறந்தே கொல்லும் வியாதி—உடன் பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணி தீர்க்கும்
அம் மருந்து போல் வாரு முண்டு.

[ப-உ] வியாதி-வியாதியானது, உடன் பிறந்தே கொல்லும்-உடம்போடு தோன்றியே அவ்வுடம்பை அழிக்கும்; (ஆகையால்) உடன் பிறந்தார்—உடன் பிறந்தவர் எல்லோரும், சுற்றத்தார் என்றிருக்க வேண்டா-உறவினர் என்று நினைக்க வேண்டா; உடன் பிறவா-உடன் பிறவாத, மா மலையி லுள்ள-பெரிய மலையிலிருக்கிற, மருந்தே-மருந்தே, பிணி தீர்க்கும்-நோயைப் போக்கும்; அம்மருந்து போல் வாரும் உண்டு-அம் மருந்தினைப் போல (அயலாராக இருந்தும்) உதவி செய்பவரும் சிலர் உளர்.

[க-உ] உடன் பிறந்தவருள் தீமையைச் செய்கின்றவர்களும் இருக்கின்றனர்; அயலாருள் நன்மையைப் புரிகின்றவர்களும் இருக்கின்றனர்.

### மனைவி யில்லாத மனை பாழ்

21. இல்லா ளகத்திருக்க இல்லாத தொன்றில்லை
இல்லாளும் இல்லாளே யாமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமேல் அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்.

[ப-உ] இல்லாள் அகத்திருக்க-(நற்குண நற்செய்கையுடைய) மனையாள் வீட்டில் இருக்கின், இல்லாதது ஒன்று இல்லை-(அவ்வீட்டில்) இல்லாத பொருள் ஒன்றுமே இல்லையாம்; இல்லாளும்-மனைவியும், இல்லாளே ஆயின்-இல்லாமல் போயினும், இல்லாள் வலி கிடந்த மாற்றம்-மனையாள் கடுமை பொருந்திய சொல்லை.

உரைக்கு மேல்-சொல்வாளாயினும், அவ்வில்-அவ்வீடு, புலி கிடந்த-புலி தங்கிய, அறு ஆய் விடும்-புதருக்குச் சமானமாகும்.

ஆம்—அசை

[க-உ] நற்குண நற்செய்கை யுடைய மனைவி வீட்டிலிருக்க அவ்வீடு சிறப்பினைப் பெறும். அத்தகைய மனைவி யில்லாத வீடு புலி தங்கும் காடாகும்.

**விதியின் வலிமை**

**22. எழுதியவா றேகாண் இரங்குமட நெஞ்சே**
**கருதிய வாருமோ கருமம்—கருதிப் போய்க்**
**கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேல்**
**முற்பவத்தில் செய்த வினை.**

[ப-உ] இரங்கு-வருந்துகின்ற, மட நெஞ்சே-அறியாமையை யுடைய மனமே! கருதிப் போய் (நற்பயனைப் பெறலாமென) நினைத்துச் சென்று, கற்பகத்தைச் சேர்ந்தார்க்கு-கற்பகத் தருவை யடைந்தவர்க்கு, காஞ்சிரங்காய்- (அது)எட்டிக் காயை, ஈந்ததேல்-கொடுத்ததாயின், முற்பவத்தில் செய்த வினை-(அதற்குக் காரணம் அவர்) முற்பிறப்பில் செய்த தீவினையின் பயனே யாகு; கருமம்-ஒருவர் செய்யும் காரியம், கருதியவாறு ஆமோ-அவர் நினைத்த படியே ஆகுமோ? எழுதியவாறே காண்-(பிரமன்) விதித்தபடியே ஆகும் என்று அறிவாயாக.

[க-உ] செய் தொழில்கள், அவரவர் விதியின்படி யன்றி நினைத்தபடி யாகா.

கற்பகத் தரு, தன்னை யடைந்தவர் நினைப்பதைத் தரவல்லது, சிறந்த பயனைப் பெற வேண்டி அதனை யடைந்தவர், விதி வசத்தால் எட்டிக் காயை நினைக்க, அத்தரு, அதனை ஈந்ததை இச் செய்யுள் குறிப்பது உணர்க.

**சான்றோர் சினம்**

**23. கற்பினவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்**
**பொற்பினவோ டொப்பாரும் போல்வரே—விற்பிடித்து**
**நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே**
**சீரொழுகு சான்றோர் சினம்.**

[ப-உ] கயவர் - கீழோர், கடுஞ்சினத்து - கடுங் கோபத்தால், (வேறு பட்டால்) கல் பிளவோடு ஒப்பர் - கருங் கல்லின் பிளவைப் போலத் திரும்பக் கூடார்; பொன் பிளவோடு ஒப்பாரும் போல்வர் - (அப்படி வேறுபட்டபோது) பொன்னின் பிளவோடு ஒப்பாவாரும் ஒப்பாவார்; (திரும்பக் கூடுவர்) சீர் ஒழுகு - சிறப்பு மிக்க, சான்றோர் சினம்—பெரியோருடைய கோபம், வில் பிடித்து — வில்லைப் பிடித்து, நீர் கிழிய - நீர் பிளவுபட, எய்த வடுப்போல— எய்த பிளவு போல, மாறும்—(அப்போதே) மறையும்.

ஏ இரண்டும் அசைகள்.

[க-உ] கோபத்தால் வேறுபட்டபோது கடையாயவர், பிளவு பட்ட கருங்கல்லைப் போல் எக்காலத்தும் கூடார்; இடையாயவர், பிளவுபட்ட பொன் துண்டத்தைப் போல் ஒருவர் கூட்டி வைக்கக் கூடுவர்; தலையாயவர், நீரின் பிளவைப் போல் பிரிந்த போதே கூடுவர்.

### இனம் இனத்தையே நாடும்

**24.** நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்.

[ப-உ] கயத்தில் - குளத்திலுள்ள, நற்றாமரை - நல்ல தாமரையை, நல் அன்னம் - நல்ல அன்னப் பறவையானது, சேர்ந்தால் போல் - சேர்ந்தால் போல, கற்றாரை - கல்வி கற்றவரை, கற்றாரே - கல்வி கற்றவரே, காமுறுவர் - விரும்புவர்; காக்கை - காகங்கள், முது காட்டில் - சுடுகாட்டில் உள்ள, பிணம் - பிணத்தை, உகக்கும் - விரும்பும்; (அதுபோல) கற்பு இலா—கல்வியில்லாத, மூர்க்கரை - மூடரை, மூர்க்கர் - மூடரே, முகப்பர் - விரும்புவர்.

[க-உ] கற்றவரைக் கற்றவரே விரும்புவர்; கல்வியறிவில்லாத மூடரை மூடரே விரும்புவர்.

### வஞ்சனையுடையவர் ஒழுக்கம்

**25.** நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.

[ப-உ] நாகம் - நாகப்பாம்பானது, தான் நஞ்சு உடைமை—தான் விடத்தை யுடைத்தா யிருத்தலை, அறிந்து-தெரிந்து, கரந்து உறையும்-மறைந்து வசிக்கும்; நீர்ப்பாம்பு-(விடத்தைக் கொள்ளாத) நீரில் வாழும் பாம்பானது, அஞ்சா புறம் கிடக்கும் - அஞ்சாமல் வெளியே கிடக்கும்; (அவற்றைப் போல்) நெஞ்சில் கரவுடையார்-மனத்தில் வஞ்சனையை யுடையவர், தம்மைக் கரப்பர் - தம்மை மறைத்துக் கொள்வர்; கரவு இலா-வஞ்சனை யில்லாத, நெஞ்சத்தவர்-மனத்தை யுடையவர், கரவார்-தம்மை மறைத்து ஒழுகார்.

[க-உ] வஞ்சனை யுடையோர் பிறரால் தமக்குயாது நேருமோ என்று பயந்து தம்மைத் தாம் மறைத் தொழுகுவர். வஞ்சனை யில்லாதவர் அப்பய மின்மையால் தம்மை ஒளிக்கார்.

### மன்னனைக் காட்டிலும் கற்றோர் சிறப்புடையர்

**26.** **மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்**
**மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்**
**தன் தேச மல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்**
**சென்ற விடமெல்லாம் சிறப்பு.**

(ப-உ) மன்னனும்-அரசனையும், மாசு அற - குற்றம் நீங்க, கற்றோனும்-கற்ற புலவனையும், சீர்தூக்கின் - ஆராய்ந்து பார்த்தால், மன்னனில்-அரசனைக் காட்டிலும், கற்றோன் சிறப்புடையன்-கற்ற புலவன் சிறப்புடையவனாவான்; மன்னற்கு-அரசனுக்கு, தன் தேச மல்லால்-தன் நாட்டிலல்லாமல், (பிற தேசங்களில்) சிறப்பு இல்லை—சிறப்பில்லையாம்; கற்றோர்க்கு - புலவனுக்கு, சென்றவிட மெல்லாம்—போன தேசங்களில் எல்லாம், சிறப்பு-சிறப்பு உண்டாகும்.

[க-உ] மன்னவனுக்குத் தன் தேசத்தில் மாத்திரம் சிறப்பு உண்டாகும்; கற்றவருக்குச் சென்றவிடத்தி லெல்லாம் சிறப்பாகும்; ஆகையால் இருவரில் கற்றவரே சிறந்தவராக மதிக்கப்படுவர்.

### எமனாகுவோர்

**27** **கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொல்கூற்றம்**
**அல்லாத மாந்தர்க் கறம்கூற்றம்—மெல்லிய**
**வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே**
**இல்லிற் கிசைந்தொழுகாப் பெண்.**

[ப-உ] மெல்லிய-பெண்மையான, வாழைக்கு - வாழைமரத்துக்கு, தான் ஈன்ற காய்-தான் தள்ளிய காய்களையுடைய குலையே, கூற்றம்-எமனாகும்; (அதுபோல) கல்லா மாந்தர்க்கு-கல்வி யறிவில்லாத மக்களுக்கு, கற்றுணர்ந்தார் சொல்-நூல்களைக் கற்றுப்பொருளை யறிந்தவருடைய உறுதி மொழியானது, கூற்றம்-எமனாகும்; அல்லாத மாந்தர்க்கு-அற நெறியில் செல்லாத மக்களுக்கு, அறம் கூற்றம்-தருமமே எமனாகும்; இல்லிற்கு-இல்லறத்திற்கு, இசைந்து ஒழுகா-பொருந்தி நடவாத, பெண்-மனைவியானவள், (கணவனுக்கு) கூற்றம்-எமனாவாள்.

[க-உ] உண்மை நூற்களைக் கற்றறியாத மூடர்களுக்குக் கற்றறிந்தவர்கள் சொல்லும் நீதிகள் யமனைப் போல வருத்தம் செய்யும்; தரும மார்க்கத்தில் செல்லாத மக்களுக்கு அறக் கடவுளே யமனைப் போல வருத்தம் செய்யும்.

வறுமையால் குணம் மாறாதவர்

28. சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறிய ராயினும் தார் வேந்தர் கேட்டால்
மனஞ்சிறிய ராவரோ மற்று.

[ப-உ] மென் சந்தனக் குறடு-மிருதுவாகிய சந்தனக்கட்டை, தான் தேய்ந்த காலத்தும்-தான் தேய்ந்து போன காலத்திலும், கந்தம் குறைபடாது-மணம் குறையாது; ஆதலால்-ஆதலினால், தார் வேந்தர்-மாலையை யணிந்த சிறந்த அரசர்கள், கேட்டால்-வறுமையால், தம் தம் தனம்-தங்கள் தங்கள் செல்வத்தில், சிறியராயினும்-குறைந்தவராயினும், மனம் சிறியராவரோ - மனம் சுருங்கினவர் ஆவரோ? (ஆகார்).

[க-உ] சிறந்த அரசர்கள், வறுமையால் செல்வம் சுருங்கினாலும் மன விரிவு நீங்காதவராவார்.

திருமடந்தை ஆம்போது ஆவன

29. மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவு முயர்குலமு மெல்லாந்—திருமடந்தை
ஆம்போ தவளோடும் ஆகு மவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம்.

[ப-உ] மருவு இனிய சுற்றமும்-பொருந்திய நல்ல உறவும், வான் பொருளும் - சிறந்த செல்வமும், நல்ல உருவும் - நல்ல அழகும், உயர் குலமும்-உயர்ந்த குடிப் பிறப்பும் ஆகிய இவை, திரு மடந்தை-இலக்குமி, ஆம் போது-கூடும்போது, அவளோடும் ஆகும்-அவளுடனே வந்து கூடும்; அவள் பிரிந்து-அவள் நீங்கி, போம் போது-போகும்பொழுது, அவளோடும் போம்-அவளோடும் போய்

ஆகும் போகும் என்பன, ஆம் போம் என்று விகாரப்பட்டன

[க-உ] சுற்றம், செல்வம், அழகு, உயர் குலம் முதலிய நலங்கள் யாவும் நிலையுடையன வல்ல.

### அறிவுடையோர் ஒழுக்கம்

**30.** சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம்.

[ப-உ] மரம்-மரங்கள், மாந்தர்-மக்கள், குறைக்கும் தனையும்-(அவற்றை) வெட்டு மளவும், குளிர் நிழலை-குளிர்ந்த நிழலை, தந்து-கொடுத்து, மறைக்கும்-வெயிலை மறைக்கும்; (அது போல) அறிவு உடையோர்-சிறந்த அறிவினை யுடையவர், சாந்தனையும்-தாம் இறந்து போமளவும், தீயனவே செய்திடினும்-(பிறர் தமக்குத்) தீங்குகளையே செய்த போதிலும், தாம் அவரை-தாம அவரையும், ஆந்தனையும் - தம்மாலே ஆகுமளவும், காப்பர்-காப்பார்.

ஆம் - அசை, கண்டீர் - முன்னிலை யசை.

[க-உ] உண்மை யறிவுடையவர் தமக்குத் தீங்கு செய்பவருக்கும் நன்மையே செய்வர்.

**வாக்குண்டாம் மூலமும் விளக்கவுரையும் முற்றிற்று.**

ஔவையார் அருளிய

# நல்வழி

## கடவுள் வாழ்த்து

**பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா.**

*[ப-உ] கோலம் செய்-அழகு செய்கின்ற, துங்கம் - மலை போன்ற, கரிமுகத்து-யானை முகத்தை யுடைய, தூமணியே - பரிசுத்தமாகிய மாணிக்கம் போன்ற விநாயகக் கடவுளே! நான், பாலும் தெளி தேனும், பாகும் பருப்பும் இவை நாலும் - நான் பசுவின் பாலும், தெளிந்த தேனும், வெல்லப் பாகும், பருப்புமாகிய இவை நான்கையும், கலந்து-சேர்த்து, உனக்குத் தருவேன் - உனக்குக் கொடுப்பேன்; நீ சங்கத் தமிழ் மூன்றும் - நீ சங்கத் தமிழ் ஆகிய இயல், இசை, நாடகம் என்று சொல்லப்பட்ட மூன்றையும், எனக்குத் தா - எனக்குக் கொடு.*

*[க-உ] விநாயகப் பெருமானே! நான், பால், தெளிதேன், முதலிய நான்கு பொருள்களை உனக்கு நிவேதிப்பேன்; நீ யெனக்கு இயல் இசை, நாடகம் என்று சொல்லப்பட்ட மூன்று பொருள்களைத் தருவாயாக.*

*நான் நான்கு பொருளைத் தருகின்றேன்; நீ யெனக்கு மூன்று பொருளைக்கொடு என்றதில் அமைந்த சொல் நயம் போற்றற்குரியது.*

***தீயன போக்கி நன்மையே புரி***

**1. புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவை
மண்ணில் பிறந்தார்க்கு வைத்தபொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்.**

[ப-உ] புண்ணியமாம்-அறம் வளர்ச்சியையும் செய்யும்; பாவம் போம்-பாவம் அழிவினைச் செய்யும்; போன நாள் செய்த அவை-முற்பிறப்பில் செய்த அப் புண்ணிய பாவங்களே, மண்ணில் பிறந்தார்க்கு-பூமியில் பிறந்த மக்களுக்கு, வைத்த பொருள்-வைக்கப்பட்ட பொருளாகும்; எண்ணுங்கால்-ஆராய்ந்து பார்க்கின், எச்சமயத்தோர் சொல்லும்-எந்த மதத்தினர் சொல்வதும், ஈது ஒழிய - இதனைத் தவிர்த்து, வேறில்லை-வேறு கிடையாது; (ஆகையால்) தீது ஒழிய நன்மை செயல்-பாவஞ் செய்யாது புண்ணியமே செய்க.

[க-உ] புண்ணியம் இன்பத்தையும், பாவம் துன்பத்தையும் உண்டு பண்ணுவதால், பாவத்தைப் போக்கிப் புண்ணியத்தைச் செய்தல் வேண்டும்.

### இரண்டு வகை சாதி

**2.** சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி.

[ப-உ] சாற்றுங்கால் - சொல்லுமிடத்து, மேதினியில்-உலகில், சாதி இரண்டொழிய-இரண்டு சாதியைத் தவிர, வேறில்லை-வேறோ இல்லை. (அவ் விருசாதியார் யாவரெனின்) நீதிவழுவா நெறி - நீதி தவறாத நல்ல வழியில் நின்று, முறையின்-முறையோடு, இட்டார் - (வறிஞர் முதலாயினோருக்கு) தருமம் செய்தார், பெரியோர்-உயர்ந்த சாதியார்; இடாதார்-அங்ஙனம் தருமஞ் செய்யாதவர், இழி குலத்தோர்-இழிந்த சாதியார்; பட்டாங்கிலுள்ள படி-(இது) உண்மையான நூல்களில் கண்டதாகும்.

[க-உ] வறிஞருக்கு இல்லை யென்னாது, கொடுப்பவர் உயர்ந்த சாதியராவார்; கொடாதவர் தாழ்ந்த சாதியராவார்.

### தருமத்தின் சிறப்பு

**3.** இடும்பைக் கிடும்பை யியலுடம் பிதன்றே
இடும் பொய்யை மெய்யென் றிராதே—இடுங்கடுக
உண்டாயி னுண்டாகும் ஊழில் பெருவலி நோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.

[ப-உ] இம்மைக்கு - துன்பங்களாகிய (சாக்குருக்கு) இடம் - இட்டு வைக்கும், மை - மையை (ஒத்த), இயல் உடம்பு - இயல்பாகிய உடம்பு, இது அன்றோ - இது அல்லவா? இடம் பொய்ம்மை - (உணவு) இருக்கின்ற நிலையில்லாத இந்த உடம்பை, பொய் என்று இராது - நிலையுடையதென்று கருதியிராமல், கடிக - விரைவாக, இடும் - வறிஞருக்குக் கொடுங்கள்; உண்டாயின் - (இத் தருமம் உங்களிடம்) உண்டானால், ஊழின் பெருவலி நோய் - ஊழாகிய பெரிய வலிய நோயினின்றும், விண்டாரை - நீங்கிய ஞானிகளை, கொண்டாடும் - கொண்டாடுகின்ற, - முத்தியானது, உண்டாகும் - (உமக்கு) கிடைக்கும்.

[க-உ] ஞானிகள் ஊழை வென்று அடைகின்ற மோட்சத்தைத் தருமம் செய்பவர், எளிதாக அடைவர் என்பதாம்.

**ஆம் காலத் தன்றி ஆகா**

4\. எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லால்—கண்ணில்லான்
மாங்காய் விழ எறிந்த மாத்திரைக்கோ லொக்குமே
ஆங்கால மாகு மவர்க்கு.

[ப-உ] யார்க்கும் - எவர்க்கும், புண்ணியம் - (முன்னே செய்த) புண்ணியம், வந்து எய்து போதல்லால் - வந்து கூடுங் காலத்தில் அல்லாமல், எண்ணி - ஆலோசித்து, ஒரு கருமம் - ஒரு காரியத்தை, செய் யொண்ணாது - (மற்றைக் காலத்தில்) செய்து முடித்தல் முடியாது; (முன் செய்த புண்ணியம் வந்து பொருந்தாத காலத்தில் செய்யும் காரியம்) கண் இல்லான் - குருடன், மாங்காய் விழ எறிந்த - மாங்காயை விழுத்துவதற்கு வீசிய, மாத்திரைக் கோல் - அளவு கோலினை, ஒக்கும் - ஒத்திருக்கும்; ஆம் காலம் - (புண்ணியம் வந்து) கூடும் பொழுது; அவர்க்கு - அவர்களுக்கு, ஆகும் - (அக்காரியம் எளிதில்) முடியும்.

[க-உ] எந்தக் காரியமும் புண்ணிய வசத்தால் முடிகின்ற காலத்தில்தான் முடியும். மற்றைக் காலத்தில் செய்யும் காரியம், குருடன் மாங்காயை விழுத்த வீசிய கோல் போலப் பயனற்றுப் போகும்.

*இட்டாதவற்றை வெட்டெனா மற*

5. வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றல் போகா—இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம் நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்.

[ப-உ] *வாராத - (ஊழின்றல்) வாராதனவற்றை, வருந்தி அழைத்தாலும் - துன்புற்று அழைத்தாலும், வாரா - வாராவாம்; பொருந்துவன - (ஊழின்றல்) வரக்கூடியவற்றை, போமின் என்றல் - போய் விடுங்கள் என்று கூறினாலும், போகா - போகாவாம்; இருந்து ஏங்கி - இருந்து ஏக்கம் கொண்டு, நெஞ்சம் புண் ஆக - மனம் புண்படும்படி, நெடுந்தூரம் தாம் நினைந்து - (அவற்றைத்) தாம் நீண்ட அளவு சிந்தித்து, துஞ்சுவதே - இறந்து போவதே, மாந்தர் தொழில் - மக்களின் தொழிலாகும்.*

[க-உ] *இருவினைப் பயன்கள் காரணமாக இன்ப துன்பங்கள் வரும் ஆகையால், துன்பத்திற்கு வருந்துதல் அறிவுடைமை யாகாது.*

*ஊழின் வலி*

6. உள்ள தொழிய ஒருவர்க் கொருவர் சுகம்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
உடலோடு வாழும் உயிர்க்கு.

[ப-உ] *ஒருவர்க்கு - ஒருவருக்கு, உள்ளது ஒழிய - (ஊழின்றல் பொருந்தி) யுள்ளது அல்லாமல், ஒருவர் சுகம் - மற்றொருவருடைய சுகங்கள், கொள்ளக் கிடையா - அநுபவிக்க விரும்பினால் கூடா வாம்; (ஆகையால்) குவலயத்தில் - இப்பூமியில், உடலோடு வாழும் உயிர்க்கு - மக்களுடம்போடு கூடி வாழும் உயிர்களுக்கு, வெள்ளக் கடல் ஓடி - வெள்ளத்தை யுடைய கடலைக் கடந்து சென்று, மீண்டு கரை யேறினால் - (பொருளைச் சம்பாதித்து) திரும்பி வந்து கரையை அடைந்தாலும், என் - பயன் என்ன?*

[க-உ] *திரைகடல் ஓடிப் பொருளைத் திரட்டிக் கொண்டு திரும்பி வந்தாலும், ஊழின் அளவின்றி அப் பொருளை அநுபவிக்க முடியாது.*

நல்லாரியல்பு

7. எல்லாப் படியாலும் எண்ணினல் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன் குரம்பை—நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினல் ஆங்கமல நீர் போல்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு.

[ப-உ] எல்லாப் படியாலும் - எல்லா விதங்களினாலும், எண்ணினல் - ஆராய்ந்து பார்த்தால், இவ்வுடம்பு - இந்த உடலானது, பொல்லாப் புழு - கொடிய புழுக்களுக்கும், மலி நோய்—நிறைந்த நோய்களுக்கும், புல் குரம்பை - அற்பமான கூடு ஆகும்; நல்லார் அறிந்திருப்பர் - நல்லறிவுடைய மேலோர் இவ்வுடலின் இழிவைத் தெரிந்திருப்பர்; ஆதலினல் - ஆகையால் (அம்மேலோர்) கமலம் ஆம் நீர் போல் - தாமரை யிலையில் பொருந்தி யுள்ள தண்ணீரைப்போல், பிறிந்திருப்பார் - (உடம்போடு கூடியும்) கூடாதவர்களாய் வேறுபட்டிருப்பார்கள்; பிறர்க்கு பேசார்—(அதனைக் குறித்து) பிறரிடம் பேச மாட்டார்கள்.

[க-உ] உடம்பின் இழிவை யறிந்த பெரியோர், அதனுடன் சேர்ந்திருப்பினும் பற்றற்று இருப்பார்கள்.

உயிர்க்கு ஒழுக்கமே சிறந்தது

8. ஈட்டும் பொருள்முயற்சி யெண்ணிறந்த வாயினும் ஊழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்டம்
மரியாதை காணு மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணுந்தனம்.

[ப-உ] மகிதலத்தீர் - உலகிலுள்ளவர்களே! கேண்மின்—கேளுங்கள், ஈட்டும் பொருள் - தேடுதற்குரிய பொருள்களைக் குறித்த, முயற்சி - முயற்சிகளானவை, எண் இறந்த ஆயினும் - அளவில்லாதன வானாலும், ஊழ் - விதியானது, கூட்டும்படி யன்றி—கூட்டி வைக்கும் வகையல்லாமல், கூடாவாம் - சேராவாம்; தேட்டம் - தேடத்தக்கது, மரியாதை - மரியாதையே யாகும்.

'காணும' என்னும் இரு சொற்களும் முன்னிலை யசைகள்.

[க-உ] மக்களுக்குப் பொருளைக் காட்டிலும் மரியாதையே மிக்க சிறப்புடைய தாகும்.

இரப்போர்க்கு இல்லை யென்னாதவர்

9. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப் பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

[ப-உ] *ஆற்றுப் பெருக்கு அற்று - ஆற்றில் வெள்ளம் நீங்கி, அடி சுடும் - (மணல் வெயிலால் காய்ந்து) பாதத்தைச் சுடக்கூடிய, அந்நாளும் - அக்காலத்திலும், அவ்வாறு - அந்த ஆறானது, ஊற்றுப் பெருக்கால் - ஊற்று நீர்ப் பெருக்கினால், உலகு ஊட்டும் - உலகத்திலுள்ளவரை உண்பிக்கும் (அது போல) நல்ல குடிப் பிறந்தார் - நற்குடியில் பிறந்தவர்கள், நல்கூர்ந்தார் ஆனாலும் - தரித்திர முடையவர்கள் ஆனாலும், ஏற்றவர்க்கு - யாசிப்பவர்களுக்கு, இசைந்து - மனம் பொருந்தி, இல்லை என மாட்டார் - இல்லை யென்று சொல்ல மாட்டார். (தம்மால் கூடியதைக் கொடுப்பார்கள்)*

[க-உ] *உயர் குடியில் பிறந்தவர்கள் வறுமைக் காலத்திலும் யாசிப்பவர்களுக்குத் தம்மால் இயன்றதைக் கொடுப்பார்கள்.*

அறம் புரிந்து வாழ்க

10. ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போம் அளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்.

[ப-உ] *மாநிலத்தீர் - பெரிய பூமியில் உள்ளவர்களே! ஆண்டு ஆண்டு தோறும் - வருடம் வருடம் தோறும், அழுது புரண்டாலும் - அழுது பூமியில் புரண்டாலும், மாண்டார் - இறந்தவர், வருவரோ - வாரார்; வேண்டா - ஆகையால் அழ வேண்டுவ தில்லை; நமக்கும் அதுவழியே - நமக்கும் அம்மரணமே வழியாகும்; (ஆகையால்) நாம் போம் அளவும் - நாம் இறந்து போகின்ற வரை, எமக்கு என் என்று - எமக்கு யாது பற்றென்று, இட்டு உண்டு இரும் - ஐய மிட்டுப் பிறகு உண்டு, கவலையற்று இருப்பீர்களாக.*

[க-உ] *இறந்தாரைக் குறித்து இரங்குவதை விட்டு, நமக்கும் அதுவேயாம் என்று நினைத்து, அறம் புரிந்து வாழ்*

**வயிறு செய்யும் துன்பம்**

**11.** ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளுக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்
என்நோ வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்த லரிது.

[ப-உ] இடும்பைகூர் என் வயிறே - துன்பத்தை மிகுதியாகச் செய்கின்ற எனது வயிறே! ஒரு நாள் உணவை - ஒரு நாள் உண்ணுவதற்குரிய உணவை, ஒழியென்றால் ஒழியாய்—(உணவு கிடைக்காதபோது) விட்டிரு என்றால் விட்டிராய்; இருநாளுக்கு ஏல் என்றால் ஏலாய்—(உணவு கிடைக்கும்போது), இரண்டு நாட்களுக்கு ஏற்றுக்கொள் என்றால் ஏற்றுக்கொள்ளாய்; ஒரு நாளும் - ஒரு நாளாயினும், என் நோ அறியாய் - எனது துன்பத்தை அறிகின்றாய் இல்லை; உன்னோடு வாழ்தல் அரிது - (ஆகையால்) உன்னுடன் கூடி வாழ்தல் எனக்கு அருமையாக இருக்கின்றது.

[க-உ] துன்பத்தை அதிகமாகச் செய்கின்ற வயிற்றுடன் கூடி வாழ்தல் அருமையாகும்.

**உழவின் சிறப்பு**

**12.** ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

[ப-உ] ஆற்றங் கரையின் மரமும் - ஆற்றின் கரையிலுள்ள மரமும், அரசறிய - அரசன் அறியும்படி, வீற்றிருந்த வாழ்வும்—பெருமையாக வாழ்கின்ற வாழ்க்கையும், விழும் அன்றே - அழிந்து விடுமல்லவா? (ஆகையால்) உழுதுண்டு வாழ்வு ஏற்றம் - உழுது பயிர் செய்து சீவித்தலே உயர்வாகும்; அதற்கு ஒப்பு இல்லை—அதற்கு நிகரான வாழ்க்கை வேறொன்று மில்லை; வேறு ஓர் பணிக்கு - வேறு ஒரு தொழிலுக்கு, பழுது உண்டு - குற்றமுண்டு.

அம்—சாரியை. கண்டீர்—முன்னிலை யசை.

[க-உ] உழுது பயிர் செய்து வாழும் வாழ்க்கை எல்லாவற்றிலும் சிறந்ததாகும்.

வாழ்வலி

13. ஆவாரை யாரே அழிப்பர் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்—ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல்.

[ப-உ] அம் புவி யதன்மேல் - அழகிய பூமியின் மேலே, மெய் - உண்மையாக, ஆவாரை அழிப்பர் யார் - வாழ்வதற் குரியாரை அழிக்க வல்லவா யார்? அதுவன்றி - அதுவல்லாமல், சாவாரை தவிர்ப்பவர் யார் - இறத்தற் குரியாரை இறவாமல் தடுக்க வல்லார் யார்? ஓவாமல் - ஒழியாமல், ஐயம் புகுவாரை - பிச்சைக்குச் செல்வோரை, விலக்குவார் யார் - தடுக்க வல்லவர் யாவர்?

ஏ மூன்றும் அசைகள்.

[க-உ] ஊழினால் வந்து சேருகின்ற ஆக்கத்தையும் கேட்டையும் தவிர்க்க வல்லவர் ஒருவரு மில்லை.

உயிரினும் மானம் சிறந்தது

14. பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
இச்சைபல சொல்லி யிடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மான மழியா
துயிர்விடுகை சால உறும்.

[ப-உ] பேசுங்கால் - சொல்லு மிடத்து, பிச்சைக்கு மூத்த குடி வாழ்க்கை—பிச்சை வாங்கி உண்பதினும் பெரிய குடி வாழ்க்கையாவது, பல இச்சை சொல்லி—பல வகையான இச்சைகளைப் பேசி, இடித்துண்கை - ஒருவரை நெருக்கி உண்ணுதலாம்; சிச்சீ (இது என்ன செயல்) வயிறு வளர்க்கைக்கு - வயிற்றை வளர்ப்பதைக் காட்டிலும், மானம் அழியாது - மானம் கெடாமல், உயிர் விடுகை - உயிரை விடுதலே, சால உறும் - மிகவும் பொருத்தமானதாகும்.

[க-உ] பிறரிடத்தில் இச்சை பேசி வாங்கி உண்டு, மானம் இழந்து உயிர் வாழ்தலின் உயிரை விட்டு மானத்தை நிறுத்தல் உயர்வாம்.

பஞ்சாட்சரத்தின் மகிமை

15. சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாய மொருநாளு மில்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.

[ப-உ] சிவாய நம என்று - சிவாய நம வென்று, சிந்தித் திருப்போர்க்கு - தியானித்துக் கொண்டிருப்பார்க்கு, ஒரு நாளும் - ஒருபொழுதும், அபாயம் இல்லை - துன்ப மில்லை; இதுவே உபாயம் - (விதியை வெல்லுதற்கு) இதுவே சிறந்த உபாயமாகும்; மதி ஆகும் - (இதுவே) சிறந்த அறிவுமாகும்; அல்லாத எல்லாம் - இது வல்லாத மற்றைச் செயல்களுக் கெல்லாம், விதியே - முன் செய்த வினையே, மதியாய் விடும் - அறிவாய் விடும்.

[க-உ] பஞ்சாட்சரத்தைத் தியானிப்பவருக்கு எப்போதும் துன்ப மில்லை; அவர் விதியையும் வெல்லுவர் என்ற படியா.

சிறந்த பொருள்கள்

16. தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணம் கொடையால்
கண்ணீர்மை மாறுக் கருணையால்—பெண்ணீர்மை
கற்பழியா ஆற்றல் கடல்சூழ்ந்த வையகத்துள்
அற்புதமாம் என்றே அறி.

[ப-உ] தண்ணீர் நிலநலத்தால் - தண்ணீரானது ...... தினது நன்மையினாலும், தக்கோர் குணம் கொடையால் - நல்லோருடைய குணமானது ஈகையினாலும், கண் நீர்மை மாறுக் கருணையால் - கண்களுடைய குணமானது நீங்காத அருளினாலும், பெண் ணீர்மை கற்பு அழியா ஆற்றல் - பெண்களுடைய குணம், கற்பு நிலை கெடாத நெறியாலும், கடல் சூழ்ந்த வையகத்துள் - கடலால் சூழப்பட்ட பூமியினிடத்து, அற்புதம் ஆம் - அழகாகும் சிறந்த பொருள்களாம், என்று அறி - என்று நீ அறிவாயாக.

அற்புதம் - அழகு.

[க-உ] நிலத்தினால் தண்ணீரும், கொடையால் - நல்லோர் குணமும், கருணையால் கண்களின் இயல்பும், கற்பினால் பெண்களின் தன்மையும் சிறந்து விளங்கும.

### தீவினையே வறுமைக்குக் காரணம்

**17.** செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்து
அறும்பாவம் என்னவறிந்து அன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல்.

[ப-உ] வையத்து - இவ்வுலகில், பாவம் - பாவமானது (அறம் செய்வதால்) அறும் - அழியும், என்ன அறிந்து - என்று உணர்ந்து, அன்று - முற் பிறப்பில், இடார்க்கு - தருமம் செய்யாதவருக்கு, செய்தீவினை யிருக்க - செய்த தீவினைகள் (வறுமைக்குக் காரணமாக) இருக்க, இன்று - இப்போது தெய்வத்தை நொந்தக்கால் - கடவுளை வெறுத்தால், இருநிதியம் - பெரிய திரவியம், எய்த வருமோ - பொருந்த வருமோ (வாராது) வெறும்பானை - அரிசியும் நீரும் இல்லாத பானையானது, மேல் பொங்குமோ - மேலே பொங்குமோ? (பொங்காது)

[க-உ] வறியவர், தமது வறுமைக்குக் காரணம் தாம் முன் செய்த தீவினையே யென்றெண்ணாமல் தெய்வத்தை நோதலில்

### உலோபிகள் இயல்பு

**18.** பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்
உற்றார் உகந்தார் எனவேண்டார்—மற்றோர்
இரணம் கொடுத்தால் இடுவர் இடாரே
சரணம் கொடுத்தாலும் தாம்.

[ப-உ] பேர் உலகில் - பெரிய பூமியில், பெற்றார்—(இவர் எம்மைப்) பெற்றவர் என்றும், பிறந்தார் - (இவர் எம்முடன்) பிறந்தவர் என்றும், பெரு நாட்டார் - [இவர் எம்முடைய] நாட்டவர் என்றும், உற்றார்-(இவர் எம்முடைய) சுற்றத்தார் என்றும், உகந்தார்—(இவர் எம்மை) சினேகித்தவர் என்றும், என வேண்டார்—என்று விரும்பாதவராகிய உலோபிகள், மற்றோர் - பிறர், இரணம் கொடுத்தால் - தம்முடலில் காயத்தைச் செய்வாராயின், இடுவர் - (அவருக்கு எல்லாம்) கொடுப்பர்; சரணம் கொடுத்தாலும் இடார் - பெற்றோர் முதலியோர் அடைக்கலம் புகுந்தாலும் அவருக்கு ஒன்றும் கொடார்.

பிறந்தார் என்பதற்குப் பிறந்தவராகிய பிள்ளைகளைக் குறிப்பதாகவுங் கூறுவர்.

தாம், ஏ - அசைகள். வினையாலணையும் பெயர்.

[க-உ] உலோபிகள் தம்மைத் துன்புறுத்தும் கொடியவர்களுக் கன்றி நல்லவர்களுக்குத் தம் பொருளை ஈயார்.

வீடடையாத வீணர் இயல்பு

**19. சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்**
**பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்**
**பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்**
**நாழி அரிசிக்கே நாம்.**

[ப-உ] வயிற்றின் கொடுமையால் - வயிற்றினுடைய (பசியின்) கொடுமையால், சேவித்தும் - ஒருவரிடம் சேவகம் செய்தும், சென்று இரந்தும் - பலரிடத்தில் போய் யாசித்தும், தெள் நீர் கடல் கடந்தும - தெளிந்த நீரினையுடைய கடலைக் கடந்தும், (வேறு நாடு சென்று) பாவித்தும் - (ஒருவரைப் பெரியவ ரென்று) பாவனை செய் தொழுகியும், பார் ஆண்டும் - பூமியை ஆண்டும், பாட்டிசைத்தும் - செல்வரைப் புகழ்ந்து பாட்டுக்களைப் பாடியும், நாம் நாழி அரிசிக்கு - நாம் ஒரு படி அரிசிக்காக, உடம்பை - இந்த உடம்பை, பாழின் - வீணாக, போவிப்பம் - போக்குவோம்.

[க-உ] வீட்டினைப் பெறுதற்குக் கிடைத்த இவ்வுடலை அதனைப் பெறும் வழியில் செலுத்தாது வயிற்றுக்கு உணவு தேடும் வழிகளில் போக்குவது வருந்தத் தக்கதாகும்.

வேசியர் துணையால் விளையும் கேடு

**20. அம்பி துணையாக ஆறிழிந்த வாறொக்கும்**
**கொம்மை முலைபகர்வார்க் கொண்டாட்டம்—இம்மை**
**மறுமைக்கும் நன்றன்று மாநிதியம் போக்கி**
**வெறுமைக்கு வித்தாய் விடும்.**

[ப-உ] கொம்மைமுலை - திரட்சி பொருந்திய தனங்களை, பகர்வார் - விற்கின்ற வேசியரை, கொண்டாட்டம் - கொண்டாடுதல், அம்பி துணையாக - அம்பிக் கல்லைத் துணையாகக் கொண்டு, ஆறு இழிந்த - ஆற்றில் இறங்கிய, ஆறு ஒக்கும் - தன்மையை

நிகர்க்கும்; மாநிதியம் போக்கி - (அது) பெரிய செல்வத்தை அழித்து, வெறுமைக்கு வித்து ஆய்விடும் - தரித்திரத்துக்குக் காரணமாகிவிடும்; (ஆகையால் அது) இம்மை மறுமைக்கும் நன்றன்று - இப் பிறப்பிற்கும் மறு பிறப்பிற்கும் நல்லதாகாது.

[க-உ] பரத்தையரைச் சேர்பவன் கைப்பொருளை இழப்பதோடு இம்மை மறுமை இன்பங்களையும் இழப்பவனாகின்றான்.

வஞ்சனை யற்றோர் வாழ்க்கை வளமுறும்

**21. நீரு நிழலு நிலம் பொதியுநெற்கட்டும்**
**பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்**
**வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றுந்**
**தருஞ்சிவந்த தாமரையாள் தான்.**

[ப-உ] வஞ்சம் - வஞ்சனை, இலார்க்கு - இல்லாதவருக்கு, சிவந்த தாமரையாள் - செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகள், நீரும் - நீர் வளத்தையும், நிழலும் - நிழல் வளத்தையும், நிலம் பொதியும் நெல் கட்டும் - நிலத்திலே நிறையும் நெற்போரையும், பேரும் - பிரபலமான பேரையும், புகழும் - கீர்த்தியையும், பெரு வாழ்வும் - பெரிய வாழ்வையும், ஊரும் - கிராமத்தையும், வரும் திருவும் - வளர்கின்ற செல்வத்தையும், வாழ்நாளும்—நிறைந்த ஆயுளையும், என்றும் - எக் காலத்திலும், தரும் - தந்தருள்வாள்.

[க-உ] வஞ்சனை இல்லாதவர்க்குத் திருமகள் எல்லாவித பாக்கியத்தையும் கொடுப்பாள்.

பாடுபட்டுத் தேடிய பணம் பயன்படவேண்டும்

**22. பாடு பட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்**
**கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்**
**காவிதான் போயினபின்பு யாரே யநுபவிப்பார்**
**பாவிகாள் அந்தப் பணம்.**

[ப-உ] பாடுபட்டு - உழைத்து, பணத்தை தேடி—பொருளைச் சம்பாதித்து, புதைத்து வைத்து - அதனை பூமியில் புதைத்து வைத்து, கேடு கெட்ட மானிடரே - நன்மையை யிழந்த மனிதர்களே, கேளுங்கள் - நான் கூறுவதைக் கேட்பீர்களாக!

விட்டு, ஆவியே போயின பின்பு - உயிர் நீங்கிய பின்பு, பாவிகாள் - பாவிகளே, அந்தப் பணம் - அந்தப் பணத்தை, இங்கு ஆர் அநுபவிப்பார் - இவ்விடத்து யாவர் அநுபவிப்பார்?

தான், ஏ இரண்டும் அசைகள்.

[க-உ] ஒருவர் வருந்தி யுழைத்துத் தேடிய பொருளைத் தமக்கும் பிறர்க்கும் பயனுறும்படி தமது வாழ்நாளில் செய்தல் வேண்டும்.

*பொய் சாட்சி சொன்னவர் அழிவு*

**23. வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே**
**பாதாள மூலி படருமே—மூதேவி**
**சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே**
**மன்றோரம் சொன்னார் மனை.**

[ப-உ] மன்று - நீதி சபையில், ஓரம் சொன்னார் மனை— ஒரு பக்கமாகப் பொய் சாட்சி சொன்னவருடைய வீட்டில், வேதாளம் சேரும் - பேய்கள் வந்து சேரும்; வெள்ளெருக்கு பூக்கும்— வெள்ளெருக்கஞ் செடி(முளைத்து) மலரும்; பாதாள மூலி படரும்— பாதாள மூலி யென்னும் கொடி படர்ந்து செல்லும்; மூதேவி சென்று இருந்து வாழ்வள் - மூதேவி போய் நிலை பெற்று வாழ்வாள்; சேடன் குடி புகும் - பாம்புகள் குடி யிருக்கும்.

ஏகாரங்கள் அசைகள்.

[க-உ] நீதி சபையில் ஒரு பக்கம் சார்ந்து பொய் சாட்சி சொன்னவர் வீடு பாழாகி அழிந்துவிடும்.

*பாழானவை ஐந்து*

**24. நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்**
**ஆறில்லா ஊருக் கழகுபாழ்—மாறில்**
**உடற்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே**
**மடக்கொடி யில்லா மனை.**

[ப-உ] நீறில்லா நெற்றி பாழ் - திருநீறு அணியாத நெற்றி பாழாகும்; நெய்யில்லா - நெய் சேர்த்துக் கொள்ளாத, உணவு பாழ் - உணவு பாழாகும்; ஆறு இல்லாத ஊருக்கு - நதி இல்லாத

ஊருக்கு, அழகு பாழ் - அழகு பாழுடையும்; மாறு இல் - மாறு படாத, உடன்பிறப்பு இல்லா - சகோதரர் இல்லாத, உடம்பு பாழ் - உடம்பு பாழாகும்; மடக் கொடி - மனைவி, இல்லாத மனை பாழே - இல்லாத வீடு பாழே யாகும்.

[க-உ] திருநீறு இல்லாத முகம் பொலிவற் றிருக்கும்; நெய் யில்லாத உணவு உடலுக்குச் சிறந்த நன்மையைச் செய்யாது; நல்ல சகோதரர் இல்லாமையால் உடம்பு சிறக்காது. மனைவி யில்லாத வீடு சிறப்பினை யடையாது.

வரவுக்கு மேலாகச் செலவிடல்

25. ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

[ப-உ] ஆன முதலில் - (ஒருவன் தனக்குக்) கிடைத்த வரு வாய்க்கு, அதிகம் செலவானால் - அதிகமாகச் செலவாக்கினவன், மானம் அழிந்து - மானம் கெட்டு, மதி கெட்டு - அறிவு இழந்து, போன திசை - தான் சென்ற திசைகளிலும், எல்லார்கும் - யாவர்க் கும், கள்ளனாய் - திருடனாகி, ஏழ் பிறப்பும் தீயனாய் - எழுவகைப் பிறப்புக்களிலும், தீயனாய் - தீமையை யுடையவனாகி, நல்லார்க்கும் - (தன்னிடத்து அன்புள்ள) மனைவியர்க்கும், பொல்லனாம் - பொல் லாதவ னாவான்; நாடு - (நீ இதனை) ஆராய்ந் தறிவாயாக.

[க-உ] வரவுக்கு மேல் செலவழிப்பவன் பழிபாவங்களை அடைந்திடுவான்.

பசியால் அழிபவை

26. மானம் குலங் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப் பறந்துபோம்.

[ப-உ] பசி வந்திட - (மிக்க) பசியானது உண்டாக, மானம் - மானமும், குலம் - குடிப் பிறப்பும், கல்வி - கல்வியும், வண்மை - ஈகையும், அறிவுடைமை - அறிவுடைமையும், தானம் - தானமும், தவம் - தவமும், உயர்ச்சி - உயர்வும், தாளாண்மை - முயற்சியும்

தேனின் கசிவந்த - தேனினது கசிவு போன்ற, சொல்லியர்மேல் காமுறுதல் - சொற்களையுடைய பெண்கள்மீது ஆசை கொள்ளுதல், பத்தும் - இவை பத்தும்; பறந்து போம் - இல்லாமல் பறந்து போய்விடும்.

[க-உ] பசிப்பிணி, மானம், குலம் முதலியவற்றைப் போக்குதலின் அதைக் காட்டிலும் கொடிய தொன்றில்லை.

எல்லாம் கடவுளின் செயல்

27. ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.

[ப-உ] ஒன்றை நினைக்கின் - ஒரு பொருளைப் பெற நினைத்தால், அது ஒழிந்திட்டு - அப் பொருள் கிடையாமல், ஒன்று ஆகும் - வேறு ஒரு பொருள் கிடைக்கும்; அன்றி - அல்லாமல், அதுவரினும் - அப் பொருளே வந்தாலும், வந்தெய்தும் - வந்து அடையும்; ஒன்றை - ஒரு பொருளை, நினையாத முன் - நினையாத முன்னமே, நிற்பினும் - (அது தானே வந்து எதிரே) நின்றாலும், நிற்கும் - நிற்கும்; எனையாளும் ஈசன் செயல் - (இவை யாவும்) என்னை ஆண்டருளும் கடவுளின் செயல்களாம்.

[க-உ] கடவுளின் கருத்துப்படியன்றி நமது கருத்துப்படி ஒன்றும் நடைபெறாது.

போதும் என்னும் மனவமைதி

28. உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையும்

[ப-உ] உண்பது நாழி - உண்பது ஒரு படி அரிசி அன்னமே யாகும்; உடுப்பது - உடுத்திக் கொள்வதாகிய ஆடை, நான்கு முழம் - நான்குமுழ அளவே யாகும்; நினைந் தெண்ணுவன - நினைத்து ஆலோசிக்கும் காரியங்களோ, எண்பது கோடி - எண்பது கோடியாகும்; (ஆகையால்) கண் புதைந்த - அகக் கண் குருடு பட்டுள்ள, மாந்தர் குடி வாழ்க்கை - மக்களின் குடி வாழ்க்கையானது,

மண்ணின் கலம் போல - மட்கலம் போல, சாம் துணையும் - இறக்கு மளவும், சஞ்சலமே - அவருக்குத் துன்பமாகவே உள்ளது.

[க-உ] உள்ளதைக் கொண்டு மன வமைதியோடு வாழ்தலே சிறந்ததாகும்.

கொடையாளருக்கு யாவரும் உறவினரே

**29. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்றா தரல்போல் கரவா தளிப்பரேல்
உற்றார் உலகத் தவர்.**

[ப-உ] மரம் பழுத்தால் - மரம் பழங்களைப் பழுத்திருந்தால், வௌவாலை வாவென்று கூவி - வௌவாலை வாவென்று கூவி, இரந்து அழைப்பார் - வேண்டி யழைப்பவர், அங்கு - அம் மரத் தருகில், யாவரும் இல்லை - ஒருவரும் இல்லை; (அவை தாமே வரும்; அதுபோல) கன்றாஅ - கன்றை யுடைய பசுவானது, அமுதம் - பாலை, சுரந்து தரல் போல் - சுரந்து கொடுத்தல் போல, கரவாது அளிப்பரேல் - (தம்மிடத்துள்ள பொருளை) ஒளிக்காமல் கொடுப்ப ராயின் (அவர்க்கு) உலகத்தவர் - உலகத்தா ரெல்லாரும், உற்றார் - உறவினராவார்.

[க-உ] தம்மிடத்துள்ள பொருளைப் பிறர்க்கு இல்லை என்னுமல் கொடுப்பவருக்கு உலகிலுள்ளோர் எல்லாரும் உறவினராவார்.

விதியின் வலிமை

**30. தாந்தாமுன் செய்தவினை தாமே யநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை யென்செயலாம் ஊரெல்லாம் ஒன்றா
வெறுத்தாலும் போமோ விதி.**

[ப-உ] வேந்தே - அரசே! தாம தாம் முன் செய்த வினை - அவரவர் முற்பிறப்பில் செய்த வினைப் பயன்களை, பூந்தாமரை யோன் பொறிவழியே - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் விதிப்படியே, தாமே அநுபவிப்பர் - தாமே அனுபவிப்பார்கள்; ஒறுத்தாரை என் செயலாம் - (தீவினையால் தூண்டப்பட்டு) நமக்குத் துன்பம் செய்தவரை நாம் யாது செய்யலாம்? ஊர் எல்லாம்

ஒன்று - ஊரிலுள்ளார் எல்லாரும் ஒன்றாகக் கூடி, வெறுத்தாலும் - வெறுத்திட்டாலும், விதி போமோ - விதியானது விட்டு நீங்குமோ? (நீங்காது)

[க-உ] தயக்கு ஒருவர் துன்பம் செய்வராயின் அதுதாம் முன் செய்த வினையின் பயன் என்று கருதி அதனை அநுபவித்துப் போக்குவதே அறிவுடைமையாகும்.

### நன்மைகள் நான்கு

**31.** இழுக்குடைய பாட்டிற்கு இசைநன்று சாலும்
ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று—வழுக்குடைய
வீரத்தின் நன்று விடாநோய் பழிக்கஞ்சாத்

[ப-உ] இழுக்குடைய பாட்டிற்கு - இலக்கணக் குற்றமுடைய செய்யுளினும், (அக் குற்றமில்லாத) இசை நன்று - உரை நடை நல்லது; உயா குலத்தின் சாலும் ஒழுக்கம் நன்று - உயர்வுடைய குலத்தினு (அஃதில்லாத) மேன்மையான ஒழுக்கம் நல்லது; வழுக்குடைய வீரத்தின் - தவறுதலையுடைய வீரத்தினும், விடா நோய் நன்று - தீராப் பிணி நல்லது; பழிக்கஞ்சாத் தாரத்தின் - பழிச் சொல்லுக்கு அஞ்சாத மனைவியோடு கூடி வாழ்தலினும், தனி நன்று - தனிமையாக இருத்தல் நல்லதாகும்.

இசை - சொல்; இங்குச் சொற்களாலாகிய உரைநடையை யுணர்த்தியது.

[க-உ] இலக்கணக் குற்றமுடைய பாட்டும, நல்லொழுக்கம் இல்லாத உயர் குலமும், குற்றமுடைய வீரமும், பழிக் கஞ்சாத மனையாளோடு கூடி வாழ்தலும் தீயனவாகும்.

### செல்வ நிலையாமை

**32.** ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

[ப-உ] மாநிலத்தீர் - பெரிய பூமியிலுள்ளவர்களே! ஆறு இடும் - ஆற்று வெள்ளத்தினால் இடப்படுகின்ற, மேடும் மடுவும்

போல் - மேடும் பள்ளமும் போல, செல்வம் மாறிடும் ஏறிடும் - செல்வமானது, அழிவதும், வளர்வதுமாகும்; (ஆகையால்) சோறி டும் - (இரப்பவர்க்கு) அன்னமிடுங்கள்; தண்ணீரும் வாரும் - (குடிப் பதற்குத்) தண்ணீரும் வாருங்கள்; தர்மமே சார்பாக - (இங்ஙனம் செய்வீராயின்) இத் தருமமே துணையாக, உள் நீர்மை - உள்ளத் தின் தூய தன்மை, உயர்ந்து வீறும் - உயர்ந்து விளங்கும்.

வீறுதல் - விளங்குதல். ஆம் - அசை.

[க-உ] செல்வம் நிலையாதாகையால் அது உள்ள போதே நீ நிலை யுடைய தருமத்தைச் செய்வாயாக.

### இன்சொல்லின் வெற்றி

**33. வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்தில்**
**பட்டுருவுங் கோல்பஞ்சில் பாயாது—நெட்டிருப்புப்**
**பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்**
**வேருக்கு நெக்குவிடும்.**

[ப-உ] வேழத்தில் பட்டுருவும் கோல் - (வலிய) யானையின் மேல் தைத்து உருவிப் போகின்ற அம்பானது, பஞ்சில் பாயாது - (மென்மையான) பஞ்சின் மேல் பாய்ந்து செல்லாது; நெடு இருப் புப் பாரைக்கு - நீண்ட இரும்பினால் ஆகிய பாரை யென்னும் கருவிக்கு, நெக்குவிடா - பிளவு படாத, பாறை - கருங்கல் பாறை யானது, பசுமரத்தின் வேருக்கு - (அதன் அருகில் உள்ள) பசுமை யான மரத்தினுடைய வேரினுக்கு, நெக்குவிடும் - பிளவுபடும்; (அது போல) வெட்டெனவை - வெட்டென்னும் வன் சொற்கள், மெத் தெனவை - மெத்தென்னும் இன் சொற்களை, வெல்லாவாம் - வெல்ல மாட்டாவாம்.

[க-உ] இன் சொற்களால் வன்மையான வரையும் வெல்லலாம்.

### பொருளிலாதவர் நிலைமை

**34. கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்**
**எல்லாரும் சென்றங்கு எதிர்கொள்வர்—இல்லானை**
**இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்**
**செல்லா தவன்வாயிற் சொல்.**

[ப-உ] கல்லானே யானாலும் - கல்வி யறிவில்லாதவனே யானாலும், கைப் பொருள் ஒன்று - அவனுக்குக் கையின் கண் பொருள் ஒன்று மாத்திரம், உண்டாயின் - இருந்தால், எல்லாருஞ் சென்று - யாவரும் போய், எதிர் கொள்வர் - எதிர்கொண்டு உபசரிப்பர்; இல்லானை - (படித்தவனே யாயினும் கைப் பொருள்) இல்லாதவனை, இல்லாளும் வேண்டாள் - (அவன்) மனைவியும் விரும்பாள்; ஈன்றெடுத்த தாய் வேண்டாள் - (அவனைப்) பெற்றெடுத்த தாயும் விரும்பாள்; அவன் வாயில் சொல் செல்லாது - அவன் வாயி லிருந்து பிறக்கும் சொல் பயன்படாது.

அங்கு, மற்று அசைகள்.

[க-உ] கல்லாதவன், பொருளுடையவனாயின், யாவரும் அவனுக்குச் சிறப்புச் செய்வர்; கற்றவன், பொருளில்லாதவனாயின், அவனை எவரு மதியார்.

உரைத்தாலும் மூடன் உணரான்

35. பூவாதே காய்க்கும் மரமுமுள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்கு
உரைத்தாலுந் தோன்றா துணர்வு.

[ப-உ] பூவாதே காய்க்கும் - பூவாமலே காய்க்கின்ற, மரமும் உள - மரங்களும் உண்டு; (அது போல) மக்களுளும் - மனிதர்களுள்ளும், ஏவாதே நின்று - ஏவாமலே யிருந்து, தாம் உணர்வார் உளர் - தாமே அறிந்து செய்ய வல்லவரும் உண்டு; தூவா விரைத்தாலும் - தூவி விதைத்தாலும், நன்று ஆகா வித்து என் - நன்றாக விளையாத விதையைப் போல, பேதைக்கு - மூடனுக்கு, உரைத்தாலும் - (விளங்கச்) சொன்னாலும், உணர்வு தோன்றாது - அறிவு உண்டாகாது.

[க-உ] குறிப்பறிந்து செய்கின்றவர் அறிவுடையோர் ஆவர்; அறிவிக்கவும் அறிந்து செய்யாதவர் மூடர் ஆவர்.

அயல் மனை விரும்பலால் வரும் அழிவு

36. நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடி
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல்
மாதர்மேல் வைப்பார் மனம்.

[ப-உ] ஒள்தொடி - ஒளி பொருந்திய வளையலை அணிந்த பெண்ணே! நண்டு சிப்பி வேய் கதலி - நண்டும், சிப்பியும், மூங்கிலும், வாழையும், நாசம் உறும் காலத்தில் - அழிவை யடையும் காலத்தில், கொண்ட கரு அளிக்கும் - (அவை முறையே) கொண்டுள்ள (குஞ்சும் முத்தும் அரிசியும் காய்க் குலையும் ஆகிய) கருக்களை ஈனும், கொள்கை போல் - செய்கைபோல் (மனிதர்கள்) போதம், தனம், கல்வி - ஞானமும் செல்வமும் கல்வியும், பொன்றவருங் காலம் - அழிய வருங் காலத்தில், அயல் மாதர் மேல் - அயலார் மனைவியர்மீது, மனம் வைப்பார் - மனம் வைப்பார்கள்.

[க-உ] ஒருவன் தன் மனைவியை யன்றிப் பிற மகளிரை விரும்பின் அவனிடத்துள்ள ஞானம், செல்வம், கல்வி என்னும் மூன்றும் அழிந்து விடும்.

ஞானிகளுக்கு விதி யென்ப தில்லை

37. வினைப்பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்
அனைத்தாய நூலகத்தும் இல்லை—நினைப்ப தெனக்
கண்ணுறுவ தல்லால் கவலைபடேல் நெஞ்சேமெய்
விண்ணுறுவார்க் கில்லை விதி.

[ப-உ] நெஞ்சே - மனமே, வினைப் பயனை - ஊழ் வினையின் பயனை, வெல்வதற்கு - வெல்லுவதற்கு, வேதம் முதல் ஆம் - வேதம முதலாகவுள்ள, அனைத்தாய நூலகத்தும் - எல்லா நூல்களிடத்தும, இல்லை - (உபாயம்) ஒன்றுமில்லை; (ஆதலால்) கவலைப் படேல் - வருந்தாதே; விண் உறுவார்க்கு - வீடு அடைவார்க்கு, நினைப்பது என - (தாம்) நினைப்பது போல, கண் உறுவது அல்லால் - தம்மிடத்து உண்டாவது அல்லாமல், விதி இல்லை - ஊழ் வினைப் பயன் இல்லையாம்; மெய் - (இது) உண்மையாகும்.

[க-உ] முத்தியுலகத்தை அடையும் ஞானிகளுக்கு அவர்கள் நினைத்தவாறு உண்டாவதல்லாமல், ஊழ்வினை யில்லை.

இரண்டறக் கலத்தல்

38. நன்றென்றும் தீதென்றும் நானென்றும்தானென்றும்
அன்றென்றும் ஆமென்றும் ஆகாதே—நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள்.

[ப-உ] நன்று என்றும் - (இது) நல்ல தென்றும், தீது என்றும் - (இது) தீது என்றும், நான் என்றும் - (இது செய்தவன்) நான் என்றும், தான் என்றும் (இது செய்தவன்) அவன் என்றும், அன்று என்றும் - (இது) அன்று என்றும், ஆம் என்றும் - (இது) ஆகும் என்றும், ஆகாதே நின்ற நிலை - பேதம் செய்யாமல் (இரண்டறக் கலந்து) நின்ற நிலையே, தான் அது ஆம் தத்துவம் ஆம் - (ஆன்மாவாகிய) தான் (இறைவனாகிய) அதுவாகினற உண்மை நிலையாகும்; (இங்ஙனம் இரண்டறக் கலந்து நிற்காமல் தன்னின் வேறாக மெய்ப் பொருளைத் தேடுவது) சம்பறுத்தார் - சம்புப் புல் அறுத்தவர், (அதனைக் கட்டுதற்கு அப் புல்லே பயன்படு மென்றறியாமல்) யாக்கைக்கு - கட்டுவதற்கு, தேடும் பொருள் - தேடப்படும் பொருள் போல், போனா ஆ - போனவாறுகும்.

[க-உ) ஆன்மா, கடவுளின் வேறாயினும் தான் அது என்னும் வேற்றுமை யின்றி இரண்டறக் கலந்து நிற்கும் நிலையே உண்மை நிலையாகும்.

### பரம்பொருளை அடைதல்

**39. முப்பதா மாண்டளவில் மூன்றற்று ஒரு பொருளைத்**
**தப்பாமல் தன்னுள் பெறுனின்—செப்புங்**
**கலையளவே ஆகுமாம் காரிகையார் தங்கள்**
**முலையளவே யாகுமாம் மூப்பு.**

[ப-உ] முப்பதாம் ஆண்டளவில் - (ஒருவன்) முப்பது வயது அளவிலே, மூன்றற்று - (ஆணவம் கன்மம், மாயை யென்னும்) மூன்று குற்றங்களும் நீங்கப் பெற்று, ஒரு பொருளை - ஒப்பற்ற முதற் பொருளை, தப்பாமல் - தவறாமல், தன்னுள் பெறுனின் - தன்னுள் அடையானுயின், காரிகையார் - அழகிய மாதர்கள், தங்கள் மூப்பு - தங்களுடைய முதுமைப் பருவத்தில், முலையளவே ஆகும் - (பதியுடன் கூடி இன்பம் நுகர்தலின்றி) முலையினையுடையராதல் மாத்திரமே போல, செப்பும் கலை அளவே ஆகும் - (அவன் முதுமையில் பரம்பொருளுடன் கூடி இன்பம் நுகரப் பெறுமல்) கற்ற கல்வியை யுடையனுதல் மாத்திரமே ஆவான்.

[க-உ] முதுமை வருவதற்கு முன்பே ஒருவன் மூன்று குற்றங்களும் நீங்கப் பெற்றுப் பரம் பொருளை அடைந்திடல் வேண்டும்..

ஒரு கருத்துடைய நூல்கள்

40. தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.

[ப-உ] தேவர் குறளும் - திருவள்ளுவருடைய திருக்குறளும், திருநான்மறை முடிவும் - சிறந்த நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களும், மூவர் தமிழும் - திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் என்னும் மூவருடைய தேவாரமும், முனிமொழியும் - சடகோபர் அருளிய திருவாய்மொழியும், கோவை திருவாசகமும் - மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையாரும், திருவாசகமும், திருமூலர் சொல்லும் - திருமூல நாயனார் அருளிய திருமந்திரமும், ஒரு வாசகம் என்று உணர் - ஒரு பொருளையே கொண்டன வென்று அறிவாயாக.

[க-உ] திருக்குறள் முதலிய நூல்கள் தம்முள் மாறுபடாமல் ஒத்த பொருளையே வழங்குவனவாகும்.

நல்வழி மூலமும் விளக்கவுரையும் முற்றிற்று.



அதிவீரராமபாண்டியர் அருளிய
நறுந்தொகை என்னும்

# வெற்றி வேற்கை

## கடவுள் வாழ்த்து

**பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்
சரணவற் புதமலர் தலைக்கணி வோமே.**

[ப-உ] *பிரணவம் - பிரணவம் என்னும் மந்திரத்தின், பொருளாம் - அருத்தமாகிய, பெருந்தகை - பெருந் தன்மையை யுடைய, ஐங்கரன் - ஐந்து கைகளை யுடைய விநாயகப் பெருமானுடைய, சரணம் - திருவடிகளாகிய, அற்புத மலர் - அதிசய மிகுந்த செந்தாமரை மலரை, தலைக் கணிவோம் - தலையில் சூடிக் கொள்வோம்.*

(க-உ) *பிரணவப் பொருளாகிய விநாயகக் கடவுளை நாம் வணங்குவோமாக.*

*பிரணவம் எல்லாவற்றிற்கும் மூலம். நாம் என்னும் வினை முதல் தொக்கி நின்றது. ஏ—அசை.*

## நூற் பயன்

**வெற்றி வேற்கை வீர ராமன்
கொற்றை யாளி குலசே கரன்புகல்
நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்
குற்றங் களைவோர் குறைவிலா தவரே**

[ப-உ] *கொற்கை ஆளி - கொற்கை யென்னும் நகரை ஆள்பவனும், குலம் - தன் குலத்திற்கு, சேகரன் - முடி போன்றவனும் ஆகிய, வெற்றி வேல் கை - வெற்றி கொண்ட வேலினை யேந்திய கையை யுடைய, வீர ராமன் - அதிவீரராமபாண்டியன், புகல் - சொன்ன, நல் தமிழ் - நல்ல தமிழில், தெரிந்த - ஆராய்ந்து செய்த, நறுந்தொகை தன்னால் - நறுந் தொகை யென்னும் இந்நீதி*

நூலால், குற்றம் - தங்களுடைய குற்றங்களை, களைவோர் - போக்கு வோர், குறைவு - தாழ்வு, இலாதவர் - இல்லாதவரே.

[க-உ] அதிவீரராம பாண்டியனுடைய நறுந்தொகையைப் படித்துத் தமது குற்றங்களைப் போக்கிக் கொள்பவர், என்றும் குறைவில்லாதவ ராவார்.

நூல்

## 1. எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்

[ப-உ] எழுத்து - எழுத்துக்களை, அறிவித்தவன் - கற்பித்த வன், இறைவன் ஆகும - கடவுள் ஆவான்.

[க-உ] ஒருவனுக்குக் கல்வி கற்றுக் கொடுத்த ஆசிரியன் அவ னுக்குத் தெய்வ மாவான்.

எழுத்து முதலில் கற்பிக்கப் படுதலின், கல்வியை எழுத்து என்றார். ஆசிரியரைத் தெய்வமாகப் பாவிக்க வேண்டு மென்பது கருத்தாகும். எழுத்து என்பதற்கு இலக்கணம் என்று பொருள் செய்து, இலக்கணம் கற்பித்தவன் இறைவன் ஆவான் என்றுங் கூறுவர்.

## 2. கல்விக் கழகு கசடற மொழிதல்

[ப-உ] கல்விக்கு - (ஒருவன் கற்ற) கல்விக்கு, அழகு - அழ காவது, கசடற - குற்றம் தீர, மொழிதல் - சொல்லுதலாம்.

[க-உ] குற்றமறப் பேசுதலே கல்விக் கழகாகும்.

## 3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்

[ப-உ] செல்வர்க்கு - பொருளுடையவர்க்கு, அழகு - அழ காவது, செழுங்கிளை - நல்ல சுற்றத்தாரை, தாங்குதல் - பாது காத்த லாகும்.

[க-உ] செல்வர்க் கழகு சுற்றத்தைப் பாதுகாத்தலாம்.

## 4. வேதியர்க் கழகு வேதமு மொழுக்கமும்

[ப-உ] வேதியர்க் கழகு - மறையவருக்கு அழகாவன, வேத மும் - வேதம் ஓதுதலும், ஒழுக்கமும் - நல்லொழுக்கமும் குன்றா திருத்த லாகும்,

[க-உ] வேதியர்க் கழகாவது வேதம் ஓதுதலும் ஒழுக்கம் குன்றா திருத்தலுமாம்.

## 5. மன்னவர்க் கழகு செங்கோல் முறைமை

[ப-உ] மன்னவர்க் கழகு - மன்னவர்க் கழகாவது, செங் கோல் முறைமை - செங்கோலைச் செலுத்தும் முறைமை யாகும்.

[க-உ] அரசருக்கு அழகு, செங்கோலைச் செலுத்தும் முறைமை யாகும். செங்கோலைச் செலுத்தாதவர் அரசர் ஆகார் என்பது கருத்து.

## 6. வணிகர்க் கழகு வளர்பொரு ளீட்டல்

[ப-உ] வணிகர்க் கழகு - வைசியர்க் கழகாவது, வளர் பொருள் - வளர்கின்ற பொருளை, ஈட்டல் - தேடுதல்.

[க-உ] வணிகர்க் கழகு வளர்கின்ற பொருளைச் சேர்த்தல்.

## 7. உழவர்க் கழகேர் உழுதூண் விரும்பல்

[ப-உ] உழவர்க் கழகு - உழவர்களுக்கு அழகாவது, ஏர் உழுது - ஏர் உழுது பயிர் செய்து, ஊண் - (அதனால் வரும்) உணவை உண்பதற்கு, விரும்பல் - ஆசைப் படுதலாகும்.

[க-உ] வேளாளர்க்குப் பயிர் செய்து உண்பதை விரும்புதல், அழகாகும்.

## 8. மந்திரிக் கழகு வரும்பொரு ளுரைத்தல்.

[ப-உ] மந்திரிக்கு - அமைச்சனுக்கு, அழகு - அழகாவது, வரும் பொருள் - இனி வருங் காரியத்தை, உரைத்தல் - (முன்பே அறிந்து அரசனுக்குச்) சொல்லுதலாம்.

[க-உ] வருவதறிந்து அதனை அரசனுக்குத் தெரிவிப்பது மந்திரிக் கழகு.

## 9. தந்திரிக் கழகு தறுகண் ணாண்மை.

[ப-உ] தந்திரிக்கு - படைத் தலைவனுக்கு, அழகு - அழகாவன, தறுகண் - அஞ்சாமையும், ஆண்மை - வீரமுமாம்.

[க-உ] சேனைத் தலைவனுக்கு அஞ்சாமையும் வீரமும் அழகாகும்.

## 10. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்

[ப-உ] உண்டிக் கழகு - உணவிற்கு அழகாவது, விருந்தோடு - விருந்தினருடன், உண்டல் - உண்ணுதல்.

[க-உ] விருந்துடன் உண்டல் உணவுக் கழகாகும்.

## 11. பெண்டிர்க் கழகெதிர் பேசா திருத்தல்

[ப-உ] பெண்டிர்க் கழகு - மனைவியர்களுக்கு அழகாவது, எதிர் பேசா திருத்தல் - (கணவன் சொல்லுக்கு) எதிர்த்துப் பேசாமல் அடங்கி யிருத்த லாகும்.

[க-உ] கணவர் சொல்லுக்கு எதிர்த்துப் பேசாமல் இருத்தல், மனைவியர்களுக்கு அழகாகும்.

## 12. குலமகட் கழகு தன் கொழுநனைப் பேணுதல்

[ப-உ] குல மகளுக்கு - நல்ல குலத்தில் பிறந்த பெண்ணுக்கு, அழகு - அழகாவது, தன் கொழுநனை - தன் கணவனை, பேணுதல் - விரும்பி வழிபடுதல்.

[க-உ] நற்குடிப் பெண்டிர், தம் கணவரை விரும்பி வழிபடுவர்.

## 13. விலைமகட் கழகு தன்மேனி மினுக்குதல்

[ப-உ] விலை மகளுக்கு - வேசிக்கு, அழகு - அழகாவது, தன் மேனி - தனது உடம்பை, மினுக்குதல் - ஒளி பெறச் செய்தல்.

[க-உ] வேசிக் கழகு தனது உடம்பை மினுமினுப்படி செய்தலாம்.

## 14. அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்

[ப-உ] அறிஞர்க்கு - அறிவுடையோர்க்கு, அழகு - அழகாவது, கற்று - (கற்க வேண்டிய நூல்களைக்) கற்று, உணர்ந்து - தெளிவு பெற்று, அடங்கல் - அடங்கி யிருத்தலாம்.

[க-உ] நல்ல நூல்களைக் கற்றுத் தெளிவடைந்து அடங்கி யிருத்தல் அறிவுடையவர்க் கழகாகும்.

## 15. வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை

[ப-உ] வறிஞர்க்கு - வறியவர்க்கு, அழகு - அழகாவது, வறுமையில் - வறுமை காலத்தில், செம்மை - நல் ஒழுக்கம் கெடாமல் இருத்தல்.

[க-உ] வறுமை நிலையில் ஒழுக்கமாக நடந்துகொள்ளுதலே வறியவர்க் கழகாகும்.

## 16. தேம்படு பனையின் திரள் பழத் தொருவிதை
## வானுற வோங்கி வளம்பெற வளரினும்
## ஒருவர்க் கிருக்க நிழலா காதே

[ப-உ] பனையின் - பனை மரத்தின், தேம்படு - இனிமை பொருந்திய, திரள் - திரண்ட, பழத்து - பழத்தினது, ஒருவிதை - ஒரு வித்தானது, வானுற - ஆகாயத்தைப் பொருந்தும்படி, ஓங்கி - உயர்ந்து, வளம்பெற - செழிப்பாக, வளரினும் - வளர்ந்தாலும், ஒருவர்க்கிருக்க - ஒருவர் தங்குவதற்கு, நிழல் ஆகாது - நிழலைத் தாராது.

[க-உ] பனம்பழத்தின் பெரிய விதையி னின்றும் தோன்றிய மரம், உயரமாக வளர்ந்த போதிலும், ஒருவர் தங்குவதற்குக் கூட நிழலைத் தாராது.

## 17. தெள்ளிய வாலின் சிறுபழத் தொருவிதை
## தெண்ணீர் கயத்துச் சிறுமீன் சினையினும்
## நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
## அணிதேர் புரவி ஆட் பெரும் படையொடு
## மன்னர்க் கிருக்க நிழலா கும்மே

[ப-உ] ஆலின் - ஆல மரத்தினுடைய, தெள்ளிய - தெளிந்த, சிறு பழத்து - சிறிய கனியின், ஒரு விதை - ஒரு வித்தானது, தெண் நீர் - தெளிந்த நீரையுடைய, கயத்து - குளத்திலுள்ள, சிறு மீன் - சிறிய மீனினுடைய, சினையினும் - முட்டையைக் காட்டிலும், நுண்ணிதே ஆயினும் - சிறியதே யாயினும் (அது) அண்ணல் - பெருமை பொருந்திய, யானை - யானையும், அணி - அலங்கரிக்கப் பட்ட, தேர் - தேரும், புரவி - குதிரையும், ஆள் - காலாளும் ஆகிய,

பெரும் படையோடு - பெரிய சேனையோடு, மன்னர்க்கு - அரசருக்கு, இருக்க - தங்கி யிருப்பதற்கு, நிழல் ஆகும் - நிழலைத் தரும்.

[க-உ] ஆலம் விதை, மீனின் முட்டையை விடச் சிறியதாயி னும், மன்னர்கள், தம் நால் வகைச் சேனையோடு தங்குதற்குரிய நிழலைத் தரும்.

நிழலா கும்மே என்பதில், மகர ஒற்று விரித்தல் விகாரம். ஏ-அசை.

## 18. பெரியோ ரெல்லாம் பெரியரு மல்லர்

[ப-உ] பெரியோ ரெல்லாம் - (உருவத்தால்) பெரியவர் எல் லோரும், பெரியரு மல்லர் - பெருமை யுடையவரல்லர்.

[க-உ] உருவத்தால் பெரியவர் பெருமையை யுடையவராகார்.

## 19. சிறியோ ரெல்லாம் சிறியரு மல்லர்

[ப-உ] சிறியோர் எல்லாம் - (உருவத்தால்) சிறியவரெல் லோரும், சிறியரும் அல்லர் - சிறுமை யுடையவ ராகார்.

[க-உ] உருவத்தால் சிறியவரெல்லோரும் சிறுமை யுடையவ ராகார்.

## 20. பெற்றோ ரெல்லாம் பிள்ளைக ளல்லர்

[ப-உ] பெற்றோர் எல்லாம் - பெறப்பட்ட பிள்ளைகள் எல் லோரும், பிள்ளைகள் அல்லர் - பிள்ளைகள் ஆகார்.

[க-உ] ஒருவருக்குப் பிறந்த பிள்ளைகள் எல்லோரும் பிள்ளைக ளாகார்.

## 21. உற்றோ ரெல்லாம் உறவின ரல்லர்

[ப-உ] உற்றோர் எல்லாம் - உறவினர் எல்லோரும், உறவினர் அல்லர் - உறவினர் ஆகார்.

[க-உ] உற்றோர் எல்லோரும் உறவினர் ஆகார்.

## 22. கொண்டோ ரெல்லாம் பெண்டிரு மல்லர்

[ப-உ] கொண்டோர் எல்லாம் - (மணம் செய்து) கொள்ளப் பட்ட மனைவிமார் எல்லோரும், பெண்டிரு மல்லர் - மனைவிய ராகார்.

[க-உ] மணம் செய்து கொள்ளப்பட்ட மனைவியரெல்லோரும் மனைவியராகார்.

## 23. அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது

[ப-உ] அடினும் - காய்ச்சினாலும், ஆவின் பால் - பசுவின் பால், தன் சுவை - தனது சுவை, குன்றாது - குறையாது.

[க-உ] பசும்பாலை எவ்வளவு காய்ச்சினாலும் அதன் சுவை குறையாது.

இது முதல் ஐந்து செய்யுள்கள், மேலோர்க்கு எத்தகைய துன்பங்கள் சேர்ந்தாலும், அவர்கள் தங்களுடைய இயற்கையான நற்குணத்தைக் கைவிடார் என்பதை அறிவிப்பனவாகும்.

## 24. சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது

[ப-உ] சுடினும் - சுட்டாலும், செம்பொன் - செம்மையான பொன், தன்னொளி - தனது ஒளியானது, கெடாது - அழியாது.

[க-உ] பொன்னைச் சுட்டாலும் அதன் ஒளி குறையாமல் அதிகப்படும்.

## 25. அரைக்கினும் சந்தனம் தன்மணம் மாறாது

[ப-உ] அரைக்கினும் - அரைத்தாலும், சந்தனம் - சந்தனக் கட்டையானது, தன் மணம் - தனது வாசனை, அறாது - நீங்காது.

[க-உ] சந்தனக் கட்டையை அரைத்தாலும் அதன் மணம் நீங்காது.

## 26. புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது

[ப-உ] புகைக்கினும் - புகையச் செய்தாலும், கார் அகில் - கருமையான அகிற் கட்டையானது, பொல்லாங்கு - தீ நாற்றத்தை, கமழாது - வீசாது.

[க-உ] அகிற் கட்டையைத் தீயிட்டுப் புகைத்தாலும் தீ நாற்றம் நாறாது.

## 27. கலக்கினும் தண் கடல் சேறாகாது

[ப-உ] கலக்கினும் - கலக்கினாலும், தண்கடல் - குளிர்ச்சியான கடலானது, சேறு ஆகாது - சேறாக மாட்டாது.

[க-உ] கடலைக் கலக்கினாலும் அது சேறாகாது.

## 28. அடினும்பால் பெய்துகைப் பறுதுபேய்ச் சுரைக்காய்

[ப-உ.] பால் பெய்து - பால் வார்த்து, அடினும் - சமைத்தாலும், பேய்ச் சுரைக்காய் - கசப்புச் சுரைக்காய், கைப்பு - கசப்பானது, அறுது - நீங்காது.

[க-உ.] பேய்ச் சுரைக்காயைப் பால் வார்த்துச் சமைத்தாலும், அது தனது கசப்புத் தன்மையினின்றும் நீங்காது.

## 29. ஊட்டினும் பல்விரை யுள்ளிகம ழாதே

[ப-உ.] பல்விரை ஊட்டினும் - பல வாசனைகளை ஊட்டினாலும், உள்ளி - உள்ளிப் பூண்டானது, கமழாது - நன் மணம் வீசாது.

[க-உ.] உள்ளிப் பூண்டுக்குப் பல வாசனைகளை ஊட்டினாலும், அது நறுமணம் கமழாது.

## 30. பெருமையும் சிறுமையும் தான்தர வருமே

[ப-உ.] பெருமையும் - மேன்மையும், சிறுமையும் - தாழ்வும், தான்தர - ஒருவன் தானே செய்து கொள்ளுதலால், வரும் - வருவனவாகும்.

[க-உ.] பெருமையும் தாழ்மையும் ஒருவனுக்குத் தான் செய்யும் செய்கையாலே வருவனவாகும். அவை, பிறரால் உண்டாகா.

## 31. சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம் பெரியோ ராயிற் பொறுப்பது கடனே.

[ப-உ.] சிறியோர் - கீழ் மக்கள், செய்த - செய்த, சிறு பிழை எல்லாம் - சிறிய குற்றங்கள் எல்லாவற்றையும், பெரியோர் ஆயின் - மேலோராய் இருப்பின், பொறுப்பது - பொறுத்துக் கொள்வது, கடன் - முறைமையாம்.

[க-உ.] கீழோருடைய சிறிய குற்றங்களைப் பெரியோர் பொறுத்துக் கொள்வது முறைமையாகும்.

## 32. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயிற் பெரியோர் அப் பிழை பொறுத்தலு மரிதே.

[ப-உ.] சிறியோர் - கீழோர், பெரும் பிழை - பெரிய குற்றங்களை, செய்தனராயின் - செய்தாரானால், பெரியோர் - மேலோர்

அப்பிழை - அக் குற்றங்களை, பொறுத்தலும் - பொறுத்துக் கொள்ளுதலும், அரிது - அருமையாகும்.

[க-உ] சிறியவர் பெரிய குற்றத்தைச் செய்வாராயின் பெரியோர் அக் குற்றத்தைப் பொறுக்க மாட்டார்.

**33. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை**
**நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.**

[ப-உ] நூறு ஆண்டு - நூறு வருடங்கள், பழகினும் - பழகினாலும், மூர்க்கர் - கீழ் மக்களின், கேண்மை-நட்பானது, நீர்க்குள்-நீரிலுள்ள, பாசிபோல் - பாசையைப் போல, வேர்க் கொள்ளாது - வேர் ஊன்றாது.

[க-உ] எவ்வளவு காலம் பழகினாலும் கீழோர் நட்பு வேரூன்றாது.

**34. ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை**
**இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.**

[ப-உ] ஒரு நாள் - ஒரு தினம், பழகினும் - பழகினாலும், பெரியோர் - பெரியோருடைய, கேண்மை - நட்பானது, இரு நிலம் பிளக்க - பெரிய பூமியானது பிளக்கும்படி, வேர் வீழ்க்கும் - வேரூன்றும்.

[க-உ] மேலோர் ஒரு நாள் பழகினாலும் அவர் நட்பு வேரூன்றி உறுதி பெறும்.

**35. கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சை புகினும் கற்கை நன்றே**

[ப-உ] கற்கை நன்று - நூல்களைக் கற்பது நல்லது; பிச்சை புகினும் - பிச்சை யெடுக்கச் சென்றாலும், கற்கை நன்று - கற்பது நன்று.

[க-உ] பிச்சை யெடுத்தாலும் கல்வி கற்பது நல்லதாகும். கற்கை நன்றே கற்கை நன்றே என்று அடுக்கிக் கூறியது, கற்றலின் சிறப்பை வற்புறுத்திக் கூறியவாறாம்.

ஏகாரங்கள் அசைகள்.

**36. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.**

[ப-உ] கல்லா ஒருவன் - படிக்காத ஒருவனுடைய, குல நலம் - குலத்தின் மேன்மையை, பேசுதல் - சொல்லுதல், நெல்லினுள் - நெல் பயிரில், பிறந்த - தோன்றிய, பதராகும் - பதருக்குச் சமான மாகும்.

[க-உ] படிக்காத ஒருவன் தன் பிறப்பின் மேன்மையைப் பாராட்டிப் பேசுதல் பதரை ஒப்பாகும்.

மகரம்—விரித்தல் விகாரம்.

**37. நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன்
கற்றில னாயின் கீழ் இருப் பவனே.**

[ப-உ] நாற்பால் குலத்தின் - நால் வகையான குலங்களில், மேற்பா லொருவன் - உயர்ந்த குலத்தில் பிறந்த ஒருவன், கற்றிலனாயின் - படிக்காதவனானால், கீழ் இருப்பவன் - தாழ்ந்த குலத்தில் இருக்கத் தக்கவனே.

[க-உ] ஒருவன் உயர்ந்த குலத்தில் பிறந்தவனானாலும், படிக்காதவனாயின், அவன், தாழ்ந்த குலத்தில் பிறந்தவனே ஆவான்.

**38. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியில் கற்றோரை மேல்வரு கென்பர்.**

[ப-உ] எக்குடி பிறப்பினும் - எந்தக் குலத்தில் பிறந்தாலும், யாவரே யாயினும் - யாராக இருந்தாலும், அக் குடியில் - அந்தக் குலத்தில், கற்றோரை - கல்வி கற்றவரை, மேல் வருகென்பர் - மேலிடத்திற்கு வர வேண்டு மென்று அழைத்திடுவர்.

[க-உ] எத்தன்மைய ராணாலும் கல்வி கற்றவரை அறிஞர் மதித்திடுவர்.

வருக வென்பர் என்பது 'வருகென்பர்' எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது.

**39. அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.**

[ப-உ] அறிவுடை ஒருவனை - கல்வி அறிவுடைய ஒருவனை, அரசனும் - வேந்தனும், விரும்பும் - விரும்புவான்.

உடைய என்பது உடை என விகாரமாயிற்று.

[க-உ] அறிவுடையவனை அரசனும் விரும்புவான்.

**40. அச்சமுள் ளடக்கி அறிவகத் தில்லாக்**
**கொச்சை மக்களைப் பெறுதலி னக்குடி**
**எச்சமற் றேமாந் திருக்கை நன்றே.**

[ப-உ] அச்சம் - பயத்தை, உள்ளடக்கி - உள்ளே வைத்து, அறிவு அகத்து இல்லா - விவேகம் மனத்தின்கண் இல்லாத, கொச்சை - இழிந்த, மக்களை - பிள்ளைகளை, பெறுதலின் - பெறுவதைப் பார்க்கிலும், அக்குடி - அந்தக் குடியிலுள்ளவா, எச்சமற்று - சந்ததியின்றி, ஏமாந்து - ஏங்கி, இருக்கை நன்று - இருத்தல் நல்லதாகும்.

[க-உ] அறிவற்ற பிள்ளைகளைப் பெறுதலைக் காட்டிலும் அந்தக் குடி, சந்ததியே இல்லாமல் இருத்தல் நன்றாகும்.

**41. யானைக் கில்லை தானமுந் தருமமும்.**

[ப-உ] யானைக்கு - யானைக்கு, தானமும் - தானம் கொடுத்தலும், தவமும் - தவம் செய்தலும், இல்லை - இல்லையாம்.

[க-உ] யானைக்குக் கை நீண்டிருந்தாலும், அதற்குத் தானமும் தருமமும் கிடையாது.

**42. பூனைக் கில்லை தவமுந் தயையும்.**

[ப-உ] பூனைக்கு - பூனைக்கு, தவமும் - தவம் செய்தலும், தயையும் - உயிர்களிடத்தில் இரக்கம் காட்டுவதும், இல்லை - இல்லையாம்.

[க-உ] பூனை, கண்களை மூடி அமைதியாக இருப்பது போல் காணப்பட்டாலும், அது, தவம் செய்தலும் அருளுடையதாதலும் இல்லையாம்.

**43. ஞானிக் கில்லை இன்பமுந் துன்பமும்.**

[ப-உ] ஞானிக்கு - ஞானிகளுக்கு, இன்பமும் - சுகமும், துன்பமும் - துக்கமும், இல்லை - இல்லையாம்.

[க-உ] ஞான நிலை அடைந்தவர்க்கு உலகில் சுக துக்கம் என்பன இல்லையாம்.

## 44. சிதலைக் கில்லை செல்வமும் செருக்கும்

[ப-உ] சிதலைக்கு - செல்லுக்கு, செல்வமும் - செல்வமுடையவ னென்பதும், செருக்கு - செருக்குடைய னென்பதும், இல்லை - இல்லையாம்.

[க-உ] செல்லானது செல்வமுடையார் என்பதும் செருக்குடையார் என்பதும் நோக்காமல் எவருடைய உடைமையும் அரித்து விடும்.

## 45. முதலைக் கில்லை நீத்தும் நிலையும்.

[ப-உ] முதலைக்கு - முதலைக்கு, நீத்தும் - நீந்திச் செல்லத் தக்க ஆழமுடைய நீர் என்பதும், நிலையும் - நீந்தாமல் செல்லத் தக்க ஆழமுடைய நீர் என்பதும், இல்லை - இல்லையாம்.

[க-உ] மூர்க்கர் தக்கது தகாதது என்று பாராமல் செயலாற்றத் துணிவர்.

## 46. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.

[ப-உ] அச்சமும் - (தீச்செயல் செய்தற்கு) அஞ்சுதலும், நாணமும் - (பழிக்கு) வெட்கப்படுதலும், அறிவு இலோர்க்கு - அறிவில்லாதவருக்கு, இல்லை - இல்லையாம்.

[க-உ] அஞ்சத் தக்க தீச் செயலுக்கு அஞ்சுதலும், பழிக்கு நாணுதலும் அறிவு இல்லாதவரிடத்து இல்லை.

## 47. நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.

[ப-உ] நாளும் கிழமையும் - நட்சத்திரமும் வாரமும், நலிந்தோர்க்கு - நோயால் வருந்தியவர்க்கு, இல்லை - இல்லையாம்.

[க-உ] நோயாளிகளுக்கு இந்த நாளில் இது செய்வதென்பதும், இந்த நாளில் இது தவிர்வதென்பதும் இல்லை.

## 48. கேளுங் கிளையும் கெட்டோர்க் கில்லை.

[ப-உ] கேளும் - நட்பும், கிளையும் - உறவும், கெட்டோர்க்கு - வறிஞருக்கு, இல்லை - இல்லையாம்.

[க-உ] வறிஞருக்கு நண்பரும் உறவினரும் இல்லை.

## 49. உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா.

[ப-உ] உடைமையும் - செல்வமும், வறுமையும் - தரித்திரமும், ஒருவழி - ஓரிடத்தில், நில்லா - நிலைத்திரா.

[க-உ] செல்வமும் வறுமையும் ஓரிடத்தில் நிலைத்திராமல் மாறி மாறி வரும் என்பதாம்.

## 50. குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந் தோரூர் நண்ணினு நண்ணுவர்.

[ப-உ] குடைநிழல் இருந்து - வெண் கொற்றக் குடையின் நிழலில் இருந்து, குஞ்சரம் - யானையை, ஊர்ந்தோர் - நடத்திய அரசரும், நடை மெலிந்து - கால் நடையாக நடந்து தளர்ந்து, ஓரூர் - வேறொரு ஊரை, நண்ணினும் - அடைந்தாலும், நண்ணுவர் - அடைவர்.

[க-உ] யானையின் பிடரிமீது அமர்ந்து வெண்கொற்றக் குடை, நிழல் செய்ய, ஊர்ந்து சென்ற அரசரும், வறுமையுற்றுக் காலால் நடந்து வேற்றூர் செல்லினும் செல்வர்.

## 51. சிறப்பும் செல்வமும் பெருமையு முடையோர் அறக்கூழ்ச் சாலை யடையினு மடைவர்.

[ப-உ] சிறப்பும் - மேன்மையும், செல்வமும் - பொருளும், பெருமையும் - உயர்வும், உடையோர், - உடையவர், அறக் கூழ்ச் சாலை - தருமத்திற்காகக் கூழ் வார்க்கும் அன்ன சாலையை, அடையினும் - சேர்ந்தாலும் , அடைவர் - சேர்வர்.

[க-உ] செல்வந்தரா யிருப்போர் ஒரு காலத்தில் தரும சத்திரம் சென்று கூழுக்கு இரந்தாலும் இரப்பர்.

## 52. அறத்திடு பிச்சை கூவி யிரப்போர் அரசோ டிருந்தர சாளினு மாளுவர்.

[ப-உ] அறத்திடு பிச்சை - தருமத்திற்காக இடுகின்ற பிச்சையை, கூவி யிரப்போர் - கத்தி யாசிப்பவர், அரசோடு - அரச அங்கங்களோடு, இருந்து - கூடியிருந்து, அரசாளினும் - அரசாட்சி புரிந்தாலும், ஆளுவர் - புரிவர்.

[க-உ] பிச்சை யெடுப்பார் தமது நிலை மாறி அரசாட்சி செய்தாலும் செய்வர்.

**53. குன்றத் தனைய இருநிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே யழியினு மழிவர்.**

[ப-உ] குன்று அத்தனை - மலையளவாக உள்ள, இரு நிதியை - சங்க நிதி பதுமநிதி என்னும் இரண்டு செல்வங்களையும், படைத்தோர் - படைத்தவரும், அன்றைப் பகலே - அன்றைப் பொழுதே, அழியினும் - கெட்டாலும், அழிவர் - கெடுவர்.

[க-உ] மலையளவுள்ள செல்வத்தைப் படைத்தவரும், அப்போதே அதனை இழப்பினும் இழப்பர்.

**54. எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாயினு மாகும்.**

[ப-உ] எழுநிலை - ஏழு அடுக்குகளை யுடைய, மாடம் - மாளிகைகளும், கால் சாய்ந்து - அடியுடன் சாய்ந்து, உக்கு - நொறுங்கி, கழுதை - கழுதைகள், மேய் - மேய்கின்ற, பாழ் - பாழ் நிலம், ஆயினும் - ஆனாலும், ஆகும் - ஆகும்.

[க-உ] பல அடுக்குகளை யுடைய மாளிகைகள் எல்லாம் இடிந்து விழுந்து கழுதைகள் மேயும் பாழிடம் ஆனாலும் ஆகும்.

**55. பெற்றமும் கழுதையும் மேய்ந்த வப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தருங் கூடி
நெற்பொலி நெடுநக ராயினும் ஆகும்.**

[ப-உ] பெற்றமும் - எருதுகளும், கழுதையும் - கழுதைகளும், மேய்ந்த - மேயப்பெற்ற, அப்பாழ் - அப் பாழ் நிலமானது, பொன் தொடி - பொன்னாலாகிய வளையலை (அணிந்த) மகளிரும் - மாதர்களையும், மைந்தரும் - ஆடவர்களையும், கூடி - பொருந்தி, நெற்பொலி - நெற்குவியல்களை யுடைய, நெடு நகர் - பெரிய நகரம், ஆயினும் ஆகும் - ஆனாலும் ஆகும்.

[க-உ] எருதும் கழுதையும் மேயும் பாழ் நிலம் ஒரு காலத்தில் நல்ல நகரமாக மாறினும் மாறும்.

**56. மணவணி யணிந்த மகளி ராங்கே**
**பிணவணி யணிந்துதம் கொழுநரைத் தழீஇ**
**உடுத்த வாடை கோடியாக**
**முடித்த கூந்தல் விருப்பினும் விரிப்பர்**

[ப-உ] *மண அணி அணிந்த - மணக் கோலம் பூண்ட, மகளிர் - பெண்கள், ஆங்கே - அப்போதே, பிண அணி அணிந்து - (தம் கணவர் இறத்தலால்) பிணத்திற்குரிய கோலத்தைப் பூண்டு, தம் கொழுநரைத் தழீஇ - தம் கணவர் உடலைத் தழுவி, உடுத்த ஆடை - முன்பு தாம் உடுத்த உடையே, கோடியாக - அறுப்புக் கூறையாக, முடித்த கூந்தல் - பின்னிய கூந்தலே, விரிப்பினும் விரிப்பர் - விரித்தாலும் விரிப்பர்.*

[க-உ] *மணக் கோலம் பூண்ட பெண்கள், அம்மணப் பந்தலிலேயே தம் கணவரைப் பிணக் கோலத்துடன் கண்டு, அவர் உடம்பைத் தழுவித் தம் கூந்தலை விரித்து, அழும்படி நேர்ந்தாலும் நேரிடும்.*

**57. இல்லோ ரிரப்பது மியல்பே இயல்பே.**

[ப-உ] *இல்லோர் - பொருள் இல்லாதவர், இரப்பதும் - யாசிப்பதும், இயல்பே இயல்பே - இயற்கையே இயற்கையே.*

[க-உ] *வறியவர் இரப்பது இயல்பே யாகும்.*

**58. இரந்தோர்க் கீவது முடையோர் கடனே.**

[ப-உ] *இரந்தோர்க்கு - யாசித்தவருக்கு, ஈவதும் - கொடுப்பதும, உடையோர் - பொருளுடையவருடைய; கடன் - கடமையாகும்.*

[க-உ] *இரப்பவர்க்கு ஈவது உடையார் கடமையாகும்.*

**59. நல்ல ஞாலமும் வானமும் பெறினும்**
**எல்லா மில்லை யில்லி லோர்க்கே.**

[ப-உ] *நல்ல ஞாலமும் - நல்ல உலகையும், வானமும் - வானுலகையும், பெறினும் - பெற்றாலும், எல்லாம் - அவை யாவும்; இல் - (மாண்புடைய) மனைவியை, இல்லோர்க்கு - இல்லாதவருக்கு,*
*யாம்.*

[க-உ] மாண்புடைய மனைவியைப் பெறாதவருக்கு மனையில் எவ்வளவு செல்வம் இருந்த போதிலும், ஒன்றுமே இல்லையாகும்.

**60. தறுகண் யானை தான்பெரி தாயினும்**
**சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே.**

[ப-உ] தறுகண் - அஞ்சாமையை யுடைய, யானை - யானை யானது, தான் பெரிதாயினும் - தான் பெரிய உருவத்தையுடைய தாயினும், சிறுகண் - சிறிய கணுக்களையுடைய, மூங்கில் கோலுக்கு - மூங்கில் கோலுக்கு, அஞ்சும் - அஞ்சாநிற்கும்.

[க-உ] அஞ்சாமையை யுடைய யானை, உருவத்தால் பெரிய தாயினும் சிறிய மூங்கில் கோலுக்குப் பயப்படும்.

**61. குன்றுடை நெடுங்காட் டூடே வாழினும்**
**புன்றலைப் புல்வாய் புலிக்கஞ் சும்மே.**

[ப-உ] குன்றுடை - மலைகளையுடைய, நெடுங்காடு ஊடே - நீண்ட காட்டினுள்ளே, வாழினும் - வாழ்ந்தாலும், புல் - சிறிய, தலை - தலையை யுடைய, புல்வாய் - மானானது, புலிக்கு அஞ்சும் - புலிக்குப் பயப்படும்.

[க-உ] மானானது மலைகளையுடைய நெடுங் காட்டிற்குள் வாழ்ந்தாலும், அது புலிக்குப் பயப்படும்.

**60. ஆரையாம் பள்ளத் தூடே வாழினும்**
**தேரை பாம்பிற்கு மிகவஞ் சும்மே.**

[ப-உ] ஆரை ஆம் - ஆரைப்பூண்டு படர்ந்த, பள்ளத்து ஊடே - ஆழத்தினுள்ளே, வாழினும் - வாழ்ந்தாலும், தேரை - தேரை யானது, பாம்பிற்கு - பாம்பினுக்கு, மிக அஞ்சும்-மிகவும் பயப்படும்.

[க-உ] தேரையானது ஆரைப்பூண்டு நிறைந்த பள்ளத்தில் வாழ்ந்தாலும் பாம்பிற்கு மிகவும் பயப்படும்.

ஆரை - நீரில் படரும் ஒருவித கீரைப்பூண்டு.

**63. கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டில்**
**கடும் புலி வாழும் காடு நன்றே.**

[ப-உ] கொடுங்கோல் மன்னன் - நீதி நெறி யில்லாத மன்னவன், வாழும் நாட்டில் - வாழ்கின்ற நாட்டைப் பார்க்கிலும், கடும்

புலி வாழும் - கொடியபுலி வாழ்கின்ற, காடு - காடானது, நன்று - நல்லதாகும்.

[க-உ] கொடுங்கோல் மன்னன் அரசு செய்யும் நாட்டிலிருப்பதைப் பார்க்கிலும் கொடிய புலி வாழ்கின்ற காட்டிலிருப்பதே நல்லதாகும்.

**64. சான்றோர் இல்லாத் தொல்பதி யிருத்தலின்
தேன் தேர் குறவர் தேயம் நன்றே.**

[ப-உ] சான்றோர் இல்லா - பெரியோர் இல்லாத, தொல்பதி - பழமையான நகரில், இருத்தலின் - குடியிருப்பதைக் காட்டிலும், தேன்தேர் - தேனைத் தேடுகின்ற, குறவர் - குறவருடைய, தேயம் - தேசமானது, நன்று - குடியிருப்பதற்கு நல்லதாகும்.

[க-உ] அறிவொழுக்கங்களால் நிறைந்த பெரியோர் இல்லாத பழமையான நகரத்தில் இருப்பதைக் காட்டிலும் ஒருவர், குறவர் வசிக்கும் நாட்டில் வாழ்தல் நல்லதாகும்.

**65. காலையு மாலையு நான்மறை யோதா
அந்தண ரென்போ ரனைவரும் பதரே.**

[ப-உ] காலையும் - காலைப் பொழுதிலும், மாலையும் - மாலைப் பொழுதிலும், நான்மறை - நான்கு வேதங்களையும், ஓதா - படிக்காத, அந்தணர் - மறையவர், என்போர் அனைவரும் - என்று சொல்லப்பட்ட யாவரும், பதரே - பதரே யாவர்.

[க-உ] காலையிலும் மாலையிலும் வேதம ஓதாத அந்தணர் பதருக்குச் சமான மாவார்கள்.

**66. குடியலைத் திரந்துவெங் கோலொடு நின்ற
முடியுடை யிறைவனு மூர்க்கனும் பதரே.**

[ப-உ] குடியலைத்து - குடிகளை வருத்தி, இரந்து - பொருள் வாங்கி, வெங்கோலொடு - கொடுங்கோலொடு, நின்ற - பொருந்தி நின்ற, முடியுடை இறைவனும் - கிரீடத்தையுடைய அரசனும், மூர்க்கனும் - கொடியவனும், பதரே - பதரேயாவான்.

[க-உ] கொடுங்கோலனும் குடிகளை வருத்திப் பொருள் வாங்கும் தீய அரசனும் பதரே யாவான்.

**67. முதலுள பண்டங் கொண்டுவா ணிபம்செய்**
**ததன்பய னுண்ணு வணிகரும் பதரே.**

[ப-உ] முதல்உள - முதலாயுள்ள, பண்டம் கொண்டு - பொருளை வைத்துக்கொண்டு, வாணிபம் செய்து - வியாபாரம் செய்து, அதன்பயன் - அதனால் வரும் இலாபத்தை, உண்ணு - அநுபவியாத, வணிகரும் - வைசியரும், பதரே - பதரேயாவார்.

[க-உ] முதற் பொருளை வைத்துக்கொண்டு வாணிபம் செய்து அதன் பலன் அநுபவியாத வணிகரும் பதரேயாவார்.

**68. வித்து மேரு முளவா யிருப்ப**
**எய்த்தங் கிருக்கு மேழையும் பதரே.**

[ப-உ] வித்தும் - விதையும், ஏரும் - கலப்பையும், உளவாய் இருப்ப - (ஒருவனுக்கு) உள்ளனவாகி இருக்கவும், எய்த்தங்கு இருக்கும் - அவ்விடத்துச் சோர்ந்திருக்கும், ஏழையும் - அறிவில்லாதவனும், பதரே - பதரேயாவான்.

[க-உ] விதையும் ஏரும் இருக்கவும், நிலத்தை உழுது பயிரிடாமல் சோர்ந்திருப்பவன் பதருக்குச் சமானமாவான்.

**69. தன்மனை யாளைத் தாய்மனைக் ககற்றி**
**பின்பவன் பாராப் பேதையும் பதரே.**

[ப-உ] தன்மனையாளை - தன் மனைவியை, தாய் மனைக் ககற்றி - தாய் வீட்டிற்குப் போக்கி, பின்பு - பிறகு, அவள் பாரா - அவளைச் சென்று காணுமலிருக்கிற, பேதையும் - அறிவிலியும்; பதரே - பதருக்குச் சமானமாவான்.

[க-உ] ஒருவன் தன்னுடைய மனைவியைத் தாய் வீட்டிற்கு அனுப்பிப் பின் அவளைச் சென்று கவனிக்காமல் இருக்கிற அறிவில்லாதவனும் பதராவான்.

**70. தன்மனை யாளைத் தனிமனை யிருத்திப்**
**பிறன்மனைக் கேகும் பேதையும் பதரே.**

[ப-உ] தன் மனையாளை - தன் மனைவியை, தனி - தனிமையாக, மனை - வீட்டிலே, இருத்தி - இருக்கச் செய்து, பிறன்

மனைக்கு-அயலான் மனைவியிடத்து, ஏகும் - விரும்பிச் செல்கின்ற, பேதையும் - அறிவில்லாதவனும், பதர் - பதராவான்.

[க-உ] மனைவியை வீட்டில் தனித்திருக்கச் செய்து அயலான் மனைவியை விரும்பிச் செல்பவன் பதருக்குச் சமானமாவான்.

## 71. தன்னு யுதமுந் தன்கையிற் பொருளும் பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.

[ப-உ] தன்னுயுதமும் - தனது தொழிலுக்குரிய கருவியையும், தன் கையில் பொருளும் - தன் கையிலுள்ள பொருளையும், பிறன் கையில் - அயலான் கையில், கொடுக்கும் - கொடுக்கின்ற, பேதையும் - அறிவில்லாதவனும், பதரே - பதருக்குச் சமானமாவான்.

[க-உ] தன்னுயுதத்தையும், தன் கைப் பொருளையும் பிறன் கையில் கொடுக்கின்றவன் பதருக்குச் சமானமாவான்.

## 72. வாய்ப்பறை யாகவும் நாக்கடிப் பாகவும் சாற்றுவ தொன்றைப் போற்றிக் கேண்மின்.

[ப-உ] வாய் பறை ஆகவும் - வாயே பறையாகவும், நாக்கடிப்பாகவும் - நாக்கானது அப்பறையை அடிக்கும் குறுந்தடியாகவும், சாற்றுவ தொன்றை - சொல்லுவ தொன்றை, போற்றி - (மனம் வேறொன்றில் செல்லாதபடி) பாதுகாத்து, கேண்மின்-கேளுங்கள்.

[க-உ] வாயே பறையாகவும், நாவானது அப்பறையை அடிக்கும் குறுந்தடியாகவும் சொல்லும் ஒரு சிறந்த பொருளைக்கேட்பீராக.

## 73. பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால் மெய்போ லும்மே மெய்போ லும்மே.

[ப-உ] பொய்யுடை ஒருவன் - பொய்மையையுடைய ஒருவன், சொல் வன்மையினால் - வாக்கு வன்மையினால், மெய்போலும் மெய்போலும்-(அவன் சொல்லும் பொய்) மெய்போலத் தோன்றும்.

[க-உ] ஒருவன் சொல்லும் பொய், அவனுடைய வாக்குச் சாமர்த்தியத்தால் மெய்போலக் காணப்படும்.

**74. மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்**
**பொய்போ லும்மே பொய்போ லும்மே.**

[ப-உ] மெய்யுடை யொருவன் - உண்மையை யுடைய ஒருவன், சொலமாட்டாமையால் - பேசுந் திறமை இல்லாமையால், பொய் போலும், பொய் போலும் - (அவன் சொல்லும் மெய்) பொய் போலக் காணப்படும்

[க-உ] ஒருவன் சொல்லும் மெய், அவனுடைய வாக்குச் சாமர்த்தியம் இல்லாமையால், பொய் போலக் காணப்படும்.

**75. இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டே**
**இருவரும் பொருந்த வுரையா ராயின்**
**மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தாம்**
**மனமுற மறுகிநின் றழுத கண்ணீர்**
**முறையுறத் தேவர் மூவர் காக்கினும்**
**வழிவழி யீர்வதோர் வாளா கும்மே.**

[ப-உ] இருவர்தம சொல்லையும் - இரண்டு கட்சியாருடைய சொற்களையும், எழுதரம் கேட்டு - ஏழு முறை கேட்டு (உண்மை உணர்ந்து), இருவரும் பொருந்த - இரு கட்சியினரும் சம்மதிக்கும் படி, மனுமுறை நெறியின் - மனுநீதி முறையின் வழியாக, உரையா ராயின் - (அரசர் தீர்ப்பினை) வழங்காராயின், வழக்கிழந்தவர்தாம் - (அநீதியாக) வழக்கில் தோல்வி யுற்றோர், மனம் - மனமானது, உறமறுகி நின்று - மிகவும் கலங்கி நின்று, அழுத கண்ணீர் - அழுது பெருக்கிய கண்ணீரானது, தேவர் மூவர் - (அரி, அயன், அரன், ஆகிய) மூன்று தேவர்களும், முறையுற - முறைப்பாக, காக்கினும் - காத்தலும், வழிவழி - (அவ்வரசர்) சந்ததிகளை, ஈர்வ - அறுப்ப தாகிய, ஓர் - ஒப்பற்ற, வாளாகும் - வாட்படையாகும்.

[க-உ] நியாயம் தீர்ப்பவர் இரு கட்சிகளையும் பல முறை விசாரித்துத் தீர்ப்பளிக்க வேண்டும்; அப்படி நியாயம் சொல்லத் தவறினால், அநீதியாக வழக்கிழந்தவருடைய, அழுத கண்ணீர், நியாயாதிபதியின் சந்ததிகளை அழித்துவிடும.

**76. பழியா வருவது மொழியா தொழிவது.**

[ப-உ] பழியாவருவது - (பின்பு) பழிப்புக்கு இடமாகும் ஒன்றினை, மொழியா தொழிவது - பேசாது விடுவது நல்லதாகும்.

[க-உ] நிந்தையைத் தரும் காரியத்தைப் பற்றிப் பேசாதிருத்தல் நல்லதாகும்.

## 77. சுழியா வருபுன லிழியா தொழிவது.

[ப-உ] சுழியா - சுழித்து, வருபுனல் - வருகின்ற வெள்ளத்தில், இழியா தொழிவது - இறங்காது தவிர்க.

[க-உ] சுழித்து வருகின்ற வெள்ளத்தில், இறங்கப்படாது.

## 78. துணையோ டல்லது நெடுவழி போகேல்.

[ப-உ] துணையோ டல்லது - துணையினோடு அல்லாமல், நெடுவழி - தூரமான வழியில், போகேல் - செல்லாதே.

[க-உ] தூரமான இடத்திற்குத் துணை யின்றிப் போகாதே.

## 79. புணைமீ தல்லது நெடும்புன லேகேல்.

[ப-உ] புணைமீது அல்லது - தெப்பத்தின்மேல் அல்லாமல், நெடும்புனல் - பெரிய வெள்ளத்தில், ஏகேல் - செல்லாதே.

[க-உ] தெப்ப மின்றிப் பெரிய வெள்ளத்தில் செல்லுதல் கூடாது.

## 80. எழிலார் முலைவரி விழியார் தந்திரம் இயலா தனகொடு முயல்வா காதே.

[ப-உ] எழிலார் - அழகு பொருந்திய, முலை - தனங்களையும், வரி விழியார் - செவ்வரியோடிய கண்களையும் உடைய மாதரின், தந்திரம் - உபாயங்களுள், இயலாதன - பொருந்தாதனவற்றை, கொடு - கைக்கொண்டு, முயல்வு ஆகாது - முயலுதல் கூடாது.

[க-உ] பெண்கள் சொல்லும் உபாயங்களுள் பொருந்தாதனவற்றை மேற்கொண்டு முயலுதல் கூடாது.

## 81. வழியே யேகுக வழியே மீளுக.

[ப-உ] வழியே ஏகுக - நல்ல வழியாகவே செல்வாயாக, வழியே மீளுக - நல்ல வழியாகவே திரும்புக.

[க-உ] நேரான வழியாகச் சென்று நேரான வழியாகத் திரும்புதல் நல்லதாகும்.

## 82. இவைகாண் உலகிற் கியலா றாறே.

[ப-உ] இவை - இவைகள், உலகிற்கு - உலகத்தாருக்கு; இயலாம் - ஒழுகுதற்குரிய, ஆறு - வழிகளாம்.

காண் -

[க-உ] இவை யாவும் உலகத்தார் நடத்தற்குரிய நல் வழிகளாகும்.

வெற்றி வேற்கை மூலமும் உரையும் முற்றிற்று.



உலகநாதன் இயற்றிய

# உலகநீதி

உலக நீதிப் புராணத்தை யுரைக்கவே
கலைக ளாய்வருங் கரிமுகன் காப்பு

[ப-உ] உலகநீதி - உலகநீதியாகிய, புராணத்தை - பழைய நூலை, உரைக்க - நான் கூறுவதற்கு, கலைகள் - நான்கு வேதங்களும், ஆய்வு - ஆராய்வதற்கு அருமையான, கரிமுகன் - யானைமுகக் கடவுள், காப்பு - காப்பாவார்.

[க-உ] உலகநீதி யென்னும் நூலைச் சொல்லுவதற்கு விநாயகக் கடவுள் காப்பாவார்.

1. ஓதாம லொருநாளும் இருக்க வேண்டாம்
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்
வஞ்சனைகள் செய்வாரோ டிணங்க வேண்டாம்
போகாத இடந்தனிலே போகவேண்டாம்
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்
வாகாரும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.

[ப-உ] ஓதாமல் - படிக்காமல், ஒருநாளும் - ஒரு தினமும், இருக்க வேண்டாம் - இராதே.

ஒருவரையும் - எவரையும், பொல்லாங்கு - தீச் சொற்களை, சொல்ல வேண்டாம் - சொல்லாதே.

மாதாவை - தாயாரை, ஒருநாளும் - ஒருபோதும், மறக்க வேண்டாம் - மறவாதே.

**82. இவைகாண் உலகிற் கியலா மாறே.**

[ப-உ] இவை - இவைகள், உலகிற்கு - உலகத்தாருக்கு; இயலாம் - ஒழுகுதற்குரிய, ஆறு - வழிகளாம்.

காண் - அசைநிலை

[க-உ] இவை யாவும் உலகத்தார் நடத்தற்குரிய நல் வழிகளாகும்.

**வெற்றி வேற்கை மூலமும் உரையும் முற்றிற்று.**



உலகநாதன் இயற்றிய

# உலகநீதி

**உலக நீதிப் புராணத்தை யுரைக்கவே**
**கலைக ளாய்வரும் கரிமுகன் காப்பு**

[ப-உ] *உலகநீதி - உலகநீதியாகிய, புராணத்தை - பழைய நூலை, உரைக்க - நான் கூறுவதற்கு, கலைகள் - நான்கு வேதங்களும், ஆய்வு - ஆராய்வதற்கு அருமையான, கரிமுகன் - யானைமுகக் கடவுள், காப்பு - காப்பாவார்.*

[க-உ] *உலகநீதி யென்னும் நூலைச் சொல்லுவதற்கு விநாயகக் கடவுள் காப்பாவார்.*

**1. ஓதாம லொருநாளும் இருக்க வேண்டாம்**
**ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்**
**மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்**
**வஞ்சனைகள் செய்வாரோ டிணங்க வேண்டாம்**
**போகாத இடந்தனிலே போகவேண்டாம்**
**போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரிய வேண்டாம்**
**வாகாரும் குறவருடை வள்ளி பங்கன்**
**மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.**

[ப-உ] *ஓதாமல் - படிக்காமல், ஒருநாளும் - ஒரு தினமும், இருக்க வேண்டாம் - இராதே.*

*ஒருவரையும் - எவரையும், பொல்லாங்கு - தீச் சொற்களை, சொல்ல வேண்டாம் - சொல்லாதே.*

*மாதாவை - தாயாரை, ஒருநாளும் - ஒருபோதும், மறக்க வேண்டாம் - மறவாதே.*

வஞ்சனைகள்-மோசங்களை, செய்வாரோடு-செய்கின்றவரோடு, இணங்க வேண்டாம் - கூடாதே.

போகாத - போகத் தகாத, இடந்தனிலே - இடத்திற்கு, போக வேண்டாம் - போகாதே.

போகவிட்டு-போகும்படி செய்து, புறஞ் சொல்லி-புறங் கூறி-பின்பு பழி சொல் சொல்லித் தூற்றி, திரிய வேண்டாம் - திரியாதே.

வாகு ஆரும்-தோள் வலி நிறைந்த, குறவருடை-குறவருடைய, வள்ளி பங்கன் - வள்ளி நாய்ச்சியாரை பக்கத்தில் உடையவனாகிய, மயில் ஏறும் பெருமானை - மயிலின்மீது ஏறிச் செல்லும் முருகக் கடவுளை, நெஞ்சே - மனமே! வாழ்த்தாய் - வாழ்த்துவாயாக.

[க-உ] நீ எப்போதும் படித்துக்கொண்டே இருப்பாயாக; ஒருவரையும் இகழ்ந்து பேசாதே; தாயை மறவாதே; வஞ்சகரோடு கூடாதே; தகுதியற்ற இடத்திற்குப் போகாதே; எவரையும் புறங் கூறாதே; முருகனை வணங்குவாய்.

வேண்டாவாம் என்பது வேண்டாவென மருவியது.

2. நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்
நிலையில்லாக் காரியத்தை நிறுத்த வேண்டாம்
நஞ்சுடனே ஒருநாளும் பழக வேண்டாம்
நல்லிணக்க மில்லாரோ டிணங்க வேண்டாம்
அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்
அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்
மஞ்சாரும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.

[ப-உ] நெஞ்சு ஆர - மனம் பொருந்த, பொய்தன்னை - பொய்யை, சொல்ல வேண்டாம் - பேசாதே.

யில்லா - உறுதி இல்லாத, காரியத்தை-செயலை, நிறுத்த வேண்டாம் - நிலைபெறச் செய்யாதே.

'நஞ்சுடனே - விடஜந்துக்களுடன், ஒருநாளும் - ஒரு காலத்திலும், பழக வேண்டாம் - பழகாதே.

நல்லிணக்கம் - நல்லவர்களுடைய நட்பு, இல்லாரோடு-இல்லாதவரோடு, இணங்க வேண்டாம் - கூடாதே.

அஞ்சாமல் - பயப்படாமல், தனி வழியே - துணையின்றித் தனிமையாய், போக வேண்டாம் - போகாதே.

அடுத்தவரை - தஞ்சம் என்று அடைந்தவரை, ஒரு நாளும் - எக் காலத்திலும், கெடுக்க வேண்டாம் - கெடுக்காதே. மஞ்சு ஆரும் - வலிமை நிறைந்த, குறவருடை - குறவருடைய (மகளாகிய) வள்ளி - வள்ளி நாய்ச்சியாரை, பங்கன் - பக்கத்தில் உடையவனாகிய, மயில் ஏறும் - மயில்மீது ஏறும், பெருமானை - பெருமையை யுடைய முருகனை, நெஞ்சே - மனமே, வாழ்த்தாய் - வாழ்த்துவாயாக.

[க-உ] நீ பொய்யுரையாதே; பயனற்ற செயலைச் செய்யாதே; விட ஜந்துக்களுடன் பழகாதே; துணையின்றி நெடுவழி செல்லாதே; எவரையும் கெடுக்காதே; முருகனை வணங்குவாய்.

**3. மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்**
**மாற்றானை யுறவென்று நம்ப வேண்டாம்**
**தனந்தேடி யுண்ணாமல் புதைக்க வேண்டாம்**
**தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்**
**சினந்தேடி அல்லலையும் தேட வேண்டாம்**
**சினந்திருந்தார் வாசல்வழி செல்ல வேண்டாம்**
**வனந்தேடுங் குறவரிட வள்ளி பங்கன்**
**மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.**

[க-உ] மனம் போன - மனம் சென்ற, போக்கெல்லாம் - வழிகளில் எல்லாம், போகவேண்டாம் - போகாதே.

மாற்றானை - பகையாளியை, உறவு என்று-சுற்றம் என்று, நம்ப வேண்டாம்-நம்பாதே.

தனம்தேடி-பொருள் சம்பாதித்து, உண்ணாமல் - சாப்பிடாமல், புதைக்க வேண்டாம் - அப்பொருளைப் புதைத்துவைக்காதே.

சினம் - கோபத்தை, தேடி-அடைந்து, அல்லலையும் - அதனால் வரும் துன்பத்தையும், தேட வேண்டாம் - தேடாதே.

சினந்து இருந்தார் - கோபித்திருந்தவருடைய, வாசல்வழி - வீட்டு வாசல்வழி, சேரவேண்டாம் - சேராதே.

வனம் தேடும் - காட்டில் விலங்குகளைத் தேடுகின்ற, குறவருடை-குறவருடைய, வள்ளி பங்கன்-வள்ளி நாய்ச்சியாரை பக்கத்திலுடையவனாகிய, மயிலேறும் பெருமானை-மயிலேறுகின்ற முருகனை, நெஞ்சே - நெஞ்சமே, நீ வாழ்த்தாய் - நீ வாழ்த்துவாயாக.

[க-உ] நீ மனம் போனபடி போகாதே; பகைவனை நம்பாதே; பொருளைச் சம்பாதித்துப் பயன்படுத்து; தருமத்தை மறவாதே; கோபத்தை மேற்கொண்டு அதனால் துன்பத்தை அடையாதே; உன்மீது கோபமுற்றுள்ளவர் வீட்டிற்குச் செல்லாதே; முருகனை வாழ்த்துவாயாக.

**4.** **குற்றமொன்றும் பாராட்டித் திரிய வேண்டாம்**
**கொலைகளவு செய்வாரோ டிணங்க வேண்டாம்**
**கற்றவரை ஒருநாளும் பழிக்க வேண்டாம்**
**கற்புடைய மங்கையரைக் கருத வேண்டாம்**
**கொற்றவனை யெதிர்மாறு பேச வேண்டாம்**
**கோவிலில்லா வூரில் குடியிருக்க வேண்டாம்**
**மற்று நிகரில்லாத வள்ளி பங்கன்.**
**மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே**

[ப-உ] குற்றம்- (பிறருடைய) பிழை, ஒன்றும் - ஒன்றையும், பாராட்டி - சொல்லிக்கொண்டு, திரிய வேண்டாம்-அலையவேண்டாம்.

கொலை களவு - கொலையையும் திருட்டையும், செய்வாரோடு - செய்பவரோடு, இணங்க வேண்டாம் - சேராதே.

கற்றவரை-படித்தவரை, ஒருநாளும் - எக்காலத்திலும், பழிக்க வேண்டாம் - இகழாதே.

கற்புடைய - கற்புள்ள, மங்கையரை - மாதரை, கருத வேண்டாம் - விரும்பாதே.

கொற்றவனோடு-அரசனோடு, எதிர்மாறு - விரோதமான சொற்களை, பேச வேண்டாம் - பேசாதே.

கோவிலில்லா - கோவிலில்லாத ஊரில் - ஊரிலே, குடியிருக்க வேண்டாம்-குடியிருக்காதே.

மற்று நிகர் இல்லாத - பிறிதொன்று ஒப்பு இல்லாத, வள்ளி பங்கன் - வள்ளி நாய்ச்சியாரைப் பக்கத்தில் உடையவனாகிய, மயிலேறும் பெருமானை - மயில்மீது ஏறும் முருகனை, நெஞ்சே-மனமே, வாழ்த்தாய் - வாழ்த்துவாயாக.

[க-உ] பிறர் குற்றம் காணாதே; கொலை களவு செய்பவரோடு சேராதே; கற்றவரை இகழாதே; கற்புடைய மங்கையரை விரும்பாதே. மன்னவனிடத்து விரோதமாகப் பேசாதே. கோயில் இல்லாத ஊரில் நீ குடியிருக்காதே.

5. வாழாமல் பெண்ணை வைத்துத் திரியவேண்டாம்
மனையாளைக் குற்றமொன்றும் சொல்ல வேண்டாம்
வீழாத படுகுழியில் வீழ வேண்டாம்
வெஞ்சமரில் புறங்கொடுத்து மீள வேண்டாம்
தாழ்வான குலத்துடனே சேர வேண்டாம்
தாழ்ந்தவரைப் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்
வாழ்வாருங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.

[ப-உ] வாழாமல் - (தன் கணவனோடு) வாழ வொட்டாமல், பெண்ணை - உன் மகளை, வைத்து - உன்னிடம் வைத்துக்கொண்டு, திரிய வேண்டாம் - அலைய வேண்டாம்.

மனையாளை - மனைவியின் மீது, குற்றமொன்றும் - குற்றமான சொல் யாதொன்றையும், சொல்ல வேண்டாம் - சொல்லாதே.

வீழாத - விழத்தகாத, படுகுழியில் - பெரிய பள்ளத்தில், வீழ வேண்டாம் - வீழாதே.

வெஞ்சமரில் - கொடிய போரில், புறம் கொடுத்து - முதுகிட்டு, மீள வேண்டாம் - திரும்பி வாராதே.

தாழ்வான குலத்துடனே - தாழ்ந்த குலத்தினருடன், சேர வேண்டாம் - சேராதே.

தாழ்ந்தவரை - தாழ்வுற்றவர்களை, பொல்லாங்கு - தீங்கு, சொல்ல வேண்டாம் - சொல்லாதே.

வாழ்வு அமரும் - செல்வம் நிறைந்த, குறவருடை - குறவருடைய, வள்ளி - வள்ளி நாய்ச்சியாரை, பங்கன் - பக்கத்தில் உடையவனாகிய, மயில் ஏறும் பெருமானை - மயிலின்மீது ஏறும் பெருமையை யுடைய முருகனை, நெஞ்சே - மனமே, வாழ்த்தாய் - வாழ்த்துவாயாக.

[க-உ] நீ உன் மனைக் கணவனோடு வாழாதபடி செய்யாதே; உன் மனைவியின்மீது குற்றங் கூறாதே; செய்யத் தகாதன செய்து இழிவடையாதே; போர்க் களத்தில் புறமிட்டுத் திரும்பாதே; இழிந்தவரோடு இணங்காதே; தாழ்ந்தவரை இகழாதே; முருகனை வாழ்த்துவாயாக.

6. வார்த்தை சொல்வார் வாய்பார்த்துத் திரிய வேண்டாம்
மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்
மூத்தோர்சொல் வார்த்தைதனை மறக்க வேண்டாம்
முன்கோபக் காரரோ டிணங்க வேண்டாம்
வாத்தியார் கூலியைவைத் திருக்க வேண்டாம்
வழிபறித்துத் திரிவாரோ டிணங்க வேண்டாம்
சேர்ந்தபுக ழாளனொரு வள்ளி பங்கன்
திருக்கைவே லாயுதனைச் செப்பாய் நெஞ்சே.

[ப-உ] வார்த்தை சொல்வார் - (பயனில்லாத) சொற்களைக் கூறுவாருடைய, வாய் பார்த்து - வாயினைப் பார்த்துக் கொண்டு, திரிய வேண்டாம் - திரியாதே.

மதியாதார் - மதிக்காதவருடைய, தலைவாசல் - கடைவாயிலை, மிதிக்க வேண்டாம் - மிதிக்காதே.

மூத்தோர் சொல் - மூத்தோர்கள் கூறுகின்ற, வார்த்தைதனை - சொற்களை, மறக்க வேண்டாம்-மறக்காதே.

முன் கோபக் காரரோடு - முன் கோப முடையவரோடு, இணங்க வேண்டாம் - கூடாதே.

வாத்தியார் கூலியை - ஆசிரியருடைய சம்பளத்தை, வைத்திருக்க வேண்டாம்-வைத்திருக்காதே.

வழி பறித்து - வழிக் கொள்ளை யிட்டு, திரிவாரோடு - திரிந்து கொண்டிருப்பவருடன், இணங்க வேண்டாம் - சேராதே.

சேர்ந்த புகழாளன் - திரண்ட புகழுடையவனாகிய, ஒரு - ஒப்பற்ற, வள்ளி பங்கன் - வள்ளியம்மையைப் பக்கத்தில் உடையவனாகிய, திரு கை - அழகிய கையில், வேலாயுதனை - வேலாயுதத்தை யுடையவனாகிய முருகனை, நெஞ்சே - மனமே, செப்பாய் - நீ புகழ்வாயாக.

[க-உ] நீ வீண் பேச்சைக் கேட்டுக் காலம் கழிக்காதே; மதியாதார் வீட்டிற்குச் செல்லாதே; பெரியோர் சொல்லைத் தள்ளாதே; முன் கோபியோடு சேராதே; ஆசிரியர் கூலியை அபகரிக்காதே; வழிக் கொள்ளை செய்பவரோடு சேராதே; முருகனை நீ வாழ்த்துவாயாக.

7. கருதாமல் கருமங்கள் முடிக்க வேண்டாம்
கணக்கழிவை யொருநாளும் பேச வேண்டாம்
பொருவார்தம் போர்க்களத்தில் போக வேண்டாம்
பொதுநிலத்தி லொருநாளும் இருக்க வேண்டாம்
இருதார மொருநாளும் தேட வேண்டாம்
எளியாரை எதிரிட்டுக் கொள்ள வேண்டாம்
குருகாரும் புனங்காக்கும் ஏழை பங்கன்
குமரவேள் பாதத்தைக் கூறாய் நெஞ்சே.

[ப-உ] கருமங்கள் - (செய்யத்தக்க) காரியங்களை, கருதாமல் - நன்றாக ஆலோசியாமல், முடிக்க வேண்டாம் - செய்யாதே.

கணக்கழிவை - பொய்க் கணக்கை, ஒரு நாளும் - ஒருபோதும் பேச வேண்டாம் - சொல்ல வேண்டாம்.

பொருவார்தம் - போர் செய்வோருடைய, போர்க் களத்தில் - யுத்த பூமியின்கண், போக வேண்டாம் - போகாதே.

பொது நிலத்தில் - பொதுவாகிய இடத்தில், ஒரு நாளும் - ஒரு போதும், இருக்க வேண்டாம் - இராதே.

இருதாரம் - இரண்டு மனைவியரை, ஒரு நாளும் - ஒரு போதும், தேட வேண்டாம் - தேடிக் கொள்ளாதே.

எளியாரை - ஏழைகளை, எதிரிட்டுக் கொள்ள வேண்டாம் - பகைத்துக் கொள்ளாதே.

குருகு - நாரைகள், ஆரும் - நிறைந்த, புனம் காக்கும் - புனத்தைக் காக்கும், ஏழை பங்கன் - வள்ளி பங்கனாகிய, குமரவேள் - முருகனுடைய, பாதத்தை - திருவடிகளை, நெஞ்சே - மனமே, கூறாய் - நீ புகழ்வாய்.

[க-உ] ஆராயாமல் எதையும் நீ செய்யாதே; பொய்க் கணக்கை ஒருபோதும் சொல்லாதே; போர்க் களத்திற்குச் செல்லாதே; பொது நிலத்தில் குடியிராதே; இரு மனைவியரை மணக்காதே; ஏழைகளைப் பகைத்துக் கொள்ளாதே. முருகனை நீ வாழ்த்துவாயாக.

**8. சேராத இடந்தனிலே சேர வேண்டாம்**
**செய்தநன்றி யொருநாளும் மறக்க வேண்டாம்**
**ஊரோடுங் குண்டுணியாய்த் திரிய வேண்டாம்**
**உற்றாரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்**
**பேரான காரியத்தைத் தவிர்க்க வேண்டாம்**
**பிணைபட்டுத் துணைபோகித் திரிய வேண்டாம்**
**வாராருங் குறவருடை வள்ளி பங்கன்**
**மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.**

[ப-உ] சேராத-சேரத் தகாத, இடந்தனிலே - இடத்திலே, சேரவேண்டாம்-சேராதே.

செய்த நன்றி - ஒருவர் செய்த உபகாரத்தை, ஒருநாளும் - ஒரு போதும், மறக்க வேண்டாம்-மறக்காதே.

ஊரோடும்-ஊராரிடத்தில், குண்டுணியாய் - கோள் சொல்பவனாய், திரிய வேண்டாம்-அலையாதே.

உற்றாரை உதாசினங்கள் - உறவினரைப் பழி மொழிகள், சொல்ல வேண்டாம் - சொல்லாதே.

பேர் ஆன - புகழுக் குரிய, காரியத்தை - செயலை, தவிர்க்க வேண்டாம் - செய்யாமல் விலக்க வேண்டாம்.

பிணைபட்டு - ஒருவனுக்குக் கட்டுப் பட்டு, துணைபோகி - துணையாகச் சென்று, திரிய வேண்டாம் - அலையாதே.

வார் ஆரும் - பெருமை பொருந்திய, குறவருடை - குறவருடைய, வள்ளி பங்கன் - வள்ளி நாயகியின் கணவனாகிய, மயிலேறும் பெருமானை - மயிலேறும் முருகனை, நெஞ்சே - மனமே, வாழ்த்தாய்-வாழ்த்துவாயாக.

[க-உ] நீ தகுதி யற்றவரிடம் சேராதே; நன்றியை மறவாதே; கோள் உரையாதே; உறவினரை இகழாதே; புக ழுண்டாகும் செயலைச் செய்யாமல் விடாதே; எவர்க்கும் கட்டுப் பட்டுத் துணை போகாதே; முருகனை வாழ்த்துவாய்.

**9.** **மன்னின்று மண்ணோரம் சொல்ல வேண்டாம்**
**மனஞ்சலித்துச் சிறுகிட்டுத் திரிய வேண்டாம்**
**கண்ணழிவு செய்துதுயர் காட்ட வேண்டாம்**
**காணாத வார்த்தையைக்கட் டுரைக்க வேண்டாம்**
**புண்படவே வார்த்தைதனைச் சொல்ல வேண்டாம்**
**புறஞ்சொல்லித் திரிவாரோ டிணங்க வேண்டாம்**
**மன்னனைத்தான் தங்கையுமை மைந்தன் எங்கோன்**
**மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.**

[ப-உ] மண் - நிலத்தில், நின்று - நின்றுகொண்டு, மண்ணோரம் - பூமியைப் பற்றி, ஒரு பட்சமாக, சொல்ல வேண்டாம் - பேசாதே.

மனம் சலித்து - மனம் இளைத்து, சிலுகிட்டு - சண்டை யிட்டு, திரியவேண்டாம் - திரியாதே.

கண்ணழிவு செய்து - அருளை அழித்து, துயர் காட்ட வேண்டாம் - துன்பம் செய்யாதே.

காணாத - பாராதவைகளைப் பற்றி, கட்டு வார்த்தையை - புனைந்த வார்த்தைகளை, கட்டுரைக்க வேண்டாம் - உறுதியாகப் பேசாதே.

புண்பட - (கேட்போர் மனம்) வருந்துமாறு, வார்த்தைதனை - சொற்களை, சொல்ல வேண்டாம் - சொல்லாதே.

புறம் சொல்லி - புறங்கூறி, திரிவாரோடு - அலைபவருடன், இணங்க வேண்டாம் - சேராதே.

மண்ணளந்தான் - பூமியைத் தன் அடியால் அளந்தவனான திருமாலின், தங்கை - தங்கையாகிய, உமை - உமாதேவிக்கு, மைந்தன் - புதல்வனும், எம் - எம்முடைய, கோன் - இறைவனுமாகிய, மயிலேறும் பெருமானை - மயிலேறும் பெருமையை யுடைய முருகனை, நெஞ்சே - மனமே, வாழ்த்தாய் - வாழ்த்துவாயாக.

[க-உ] நீ ஒரு பட்சமாகப் பேசாதே; எவரிடமும் சண்டையிடாதே; கருணை யின்றி எவரையும் வருத்தாதே; காணாததைக் கண்டதாகக் கூறாதே; வருந்தும்படி எவரையும் இகழ்ந்துரையாதே; புறங் கூறாதே; முருகனை வாழ்த்துவாய்.

**10.** **மறம்பேசித் திரிவாரோ டிணங்கவேண்டாம்**
**வாதாடி வழக்கழிவு சொல்ல வேண்டாம்**
**திறம்பேசிக் கலகமிட்டுத் திரிய வேண்டாம்**
**தெய்வத்தை யொருநாளும் மறக்க வேண்டாம்**
**இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்**
**ஏசலிட்ட வுற்றாரை நத்த வேண்டாம்**

குறம்பேசி வாழ்கின்ற வள்ளி பங்கன்
குமரவேள் நாமத்தைக் கூறாய் நெஞ்சே.

மறம் பேசி - வீரத் தன்மையை (வீணாகப்) பேசி, திரிவாரோடு - திரிகின்றவருடனே, இணங்க வேண்டாம் - சேராதே.

வாதாடி - வாதம் செய்து, வழக் கழிவு - கெடு வழக்கு, சொல்ல வேண்டாம் - பேச வேண்டாம்.

திறம் பேசி - வல்லமையைக் கூறி, கலகம் இட்டு - கலகம் செய்து, திரிய வேண்டாம் - அலையாதே.

தெய்வத்தை - கடவுளை, ஒரு நாளும் - ஒரு போதும், மறக்க வேண்டாம் - மறவாதே.

இறந்தாலும் - (பொய் கூறு திருப்பின்) இறக்க நேருமாயினும், பொய்தன்னை - பொய்யை, சொல்ல வேண்டாம் - சொல்லாதே.

ஏசலிட்ட - இகழ்ச்சி செய்த, உற்றாரை - உறவினரை, நத்த வேண்டாம் - விரும்பாதே.

குறம் பேசி - குறி சொல்லி, வாழ்கின்ற - வாழும், வள்ளி பங்கன் - வள்ளி பங்கனாகிய, குமரவேள் - முருக வேளின், நாமத்தை - பெயரை, நெஞ்சே - மனமே, கூறாய் - வாழ்த்துவாய்.

[க-உ] நீ வீணாக வீரம் பேசுகின்றவருடன் கூடாதே; கெடு வழக்குத் தொடராதே; கலகம் செய்யாதே; தெய்வத்தை மறக்காதே; எப்போதும் பொய் பேசாதே; இகழ்ந்து பேசும் உறவினருடன் கலவாதே; முருகனை வாழ்த்துவாயாக.

11. அஞ்சுபேர் கூலியைக் கைக் கொள்ள வேண்டாம்
அதுவேதிங் கென்னின்நீ சொல்லக் கேளாய்
தஞ்சமுடன் வண்ணான் நாவிதன் கூலி
சகலகலை யோதுவித்த வாத்தியார் கூலி
வஞ்சமற நஞ்சறுத்த மருத்துவிச்சி கூலி
மகாநோவு தனைத்தீர்த்த மருத்துவன் றன்கூலி
இன்சொலுடன் இவர்கூலி கொடாத பேரை
ஏதேது செய்வானோ ஏமன் றானே.

[ப-உ] அஞ்சு பேர் கூலியை - ஐவருடைய கூலியை, கைக்கொள்ள வேண்டாம் - கைப் பற்றாதே. அது - அக் கூலி, ஏது என்னின் - யாதென்று கேட்பாயானால், சொல்ல - யான் கூற, நீ கேளாய் - நீ கேட்பாயாக.

தஞ்சமுடன் - மிக்க பணிவுடன் (பணியாற்றும்) வண்ணான் கூலி - வண்ணானுடைய கூலியும், நாவிதன் கூலி - அம்பட்டன் கூலியும், சகல கலை - பல கலைகளையும், ஓதுவித்த - படிப்பித்த, வாத்தியார் கூலி - ஆசிரியர் கூலியும், வஞ்சமற - வஞ்சனை யின்றி, நஞ்சறுத்த - நச்சுக் கொடியை அறுத்த, மருத்துவிச்சி கூலி - மருத்துவிச்சியின் கூலியும், மகா - பெரிய, வேதனை - நோவை, தீர்த்த - போக்கிய, மருத்துவன்தன் கூலி - வைத்தியன் கூலியும் (ஆகிய) இவர் கூலி - இவர்களுடைய கூலிகளை, இன் சொலுடன் - இனிய வார்த்தைகளுடன், கொடாத பேரை - கொடுக்காதவர்களை, ஏமன் - எமன், ஏதேது - என்ன வென்ன துன்பங்கள், செய்வாரோ - செய்வாரோ (யான் அறியேன்)

[க-உ] வண்ணான், அம்பட்டன், வாத்தியார், மருத்துவிச்சி, வைத்தியன், என்னும் ஐவருடைய கூலிகளைக் கொடுக்காவிட்டால் எம தண்டனை யுண்டாகும்.

12. கூறுக்கி யொருகுடியைக் கெடுக்க வேண்டாம்
கொண்டைமேல் பூத்தேடி முடிக்க வேண்டாம்
தூறுக்கித் தலையிட்டுத் திரிய வேண்டாம்
துர்ச்சனராய்த் திரிவாரோ டிணங்க வேண்டாம்
வீறான தெய்வத்தை யிகழ வேண்டாம்
வெற்றியுள்ள பெரியோரை வெறுக்க வேண்டாம்
மாறான குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமானை வாழ்த்தாய் நெஞ்சே.

[ப-உ] ஒரு குடியை - ஒரு குடும்பத்தை, கூறு ஆக்கி - பிரிவு செய்து, கெடுக்க வேண்டாம் - கெடுக்காதே.

கொண்டை மேல் - கொண்டையின் மீது, பூ தேடி - பூவைத் தேடி, முடிக்க வேண்டாம் - முடித்துக் கொள்ளாதே.

தூறு ஆக்கி - பிறர் மீது பழிச் சொற்களை யுண்டாக்கி, தலையிட்டு - தலையிட்டுக் கொண்டு, திரிய வேண்டாம் - திரியாதே.

துர்ச்சனராய் - தீயவர்களாகி, திரிவாரோடு - ஊர்தோறும் அலைபவருடன், இணங்க வேண்டாம் - கூடாதே.

வீறுள்ள - பெருமை யுடைய, தெய்வத்தை - கடவுளை, இகழ வேண்டாம் - இகழாதே.

வெற்றி உள்ள - மேன்மையை யுடைய, பெரியோரை - பெரியோர்களை, வெறுக்க வேண்டாம் - வெறுக்காதே.

மாறான - (மற்றை நிலத்திலுள்ளாருடன்) மாறுபட்ட, குறவருடை - குறவர்களுடைய (மகளாகிய) வள்ளி - வள்ளி நாய்ச்சியாரை, பங்கன் - பக்கத்தில் உடையவனாகிய, மயில் ஏறும் பெருமானை - மயிலின் மீது ஏறும் பெருமையையுடைய முருகனை, நெஞ்சே - மனமே, வாழ்த்தாய் - வாழ்த்துவாய்.

[க-உ] நீ ஒருவர் குடியைப் பிரித்துக் கெடுக்காதே; பிறர் காணும்படி கொண்டையின் மீது பூவைத் தேடி முடிக்காதே; பிறர் மீது பழியைச் சுமத்தாதே; தீயாருடன் சேராதே; தெய்வத்தைப் பழிக்காதே; பெரியோர்களை வெறுக்காதே; முருகனை வாழ்த்துவாயாக.

13. ஆதரித்துப் பலவகையால் பொருளுந் தேடி
அருந்தமிழால் அறுமுகனைப் பாட வேண்டி
ஓதுவித்த வாசகத்தால் உலக நாதன்
உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி
காதலித்துக் கற்றோருங் கேட்ட பேருங்
கருத்துடனே நாடோறுங் களிப்பி னோடு
போதமுற்று மிகவாழ்ந்து புகழுந் தேடி
பூலோக முள்ளளவும் வாழ்வர் தாமே.

[ப-உ] ஆதரித்து - விரும்பி, பலவகையால் - பல நல்வழிகளால், பொருளும் தேடி - பொருளையும் சம்பாதித்து, அருந் தமிழால் - அரிய தமிழ் மொழியால், அறுமுகனை - ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளை, பாட வேண்டி - பாடுதலை விரும்பி, ஓதுவித்த - ஆசிரியன் கற்பித்த, வாசகத்தால் - வாசகங்களால், உலகநாதன் - உலகநாதன் என்பவன், உண்மையாய் பாடி வைத்த - மெய்யாகப் பாடி வைத்த, உலகநீதி - உலகநீதி என்னும் இந்நூலை, காதலித்து - விரும்பி, கற்றோரும் - படித்தவரும், கேட்ட பேரும் - படிக்கக் கேட்ட பேரும், கருத்துடன் - நல்லெண்ணத்தோடும், களிப்பினோடு - மகிழ்ச்சியோடும், நாள் தோறும் - தினந்தோறும், போதம் - ஞானத்தை, உற்று - பொருந்தி, மிக வாழ்ந்து - நன்றாக வாழ்ந்து, புகழ்ந்தேடி - புகழையும் பெற்று, பூலோகம் - இவ்வுலகம், உள்ளளவும் - இருக்கும் வரையிலும், வாழ்வார் - வாழ்வார்கள்.

[க-உ] இந் நூலைக் கற்றவர்களும், கேட்டவர்களும் ஞானம் பெற்று மகிழ்ச்சியோடு இவ்வுலகம் உள்ளளவும் பெரிய வாழ்வினை வாழ்வார்கள்.

**உலகநீதி மூலமும் உரையும் முற்றிற்று.**



# நன்னெறி

## மூலமும் - உரையும்

### கடவுள் வாழ்த்து

**மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.**

[ப-உ] *மின் - மின்னலைப்போல, எறி - (ஒளியை) வீசுகின்ற, சடாமுடி - சடை முடியை யுடைய, விநாயகன் அடி தொழ - விநாயகக் கடவுளின் பாதங்களை வணங்க, நன்னெறி வெண்பா - நன்னெறி யென்னும் இந்நூலில் உள்ள வெண்பாக்கள், நாற்பதும் - நாற்பதும், வரும் - (இடையூறின்றி) எளிதாக வரும்.*

*ஏ - ஈற்றசை.*

[க-உ] *விநாயகக் கடவுளை வணங்குகின்றவருக்கு நன்னெறி யென்னும் நூலின் பொருள் நன்கு விளக்கமுறும்.*

### நூல்

#### நல்லோர் உதவி

**1. என்று முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள் கொடுப்பர் தீதற்றோர்-துன்றுசுவை
பூவிற் பொலி குழலாய் பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து.**

[ப-உ] *பூவின் பொலி குழலாய் - பூவினால் விளங்குகின்ற, கூந்தலுடையவளே! பூ கை - அழகிய கையானது, துன்றுசுவை - கிட்டிய சுவையை யுடைய உணவினை, நாவிற்கு - நாவினுக்கு (அது தன்னைப்) புகழவோ - புகழுவதற்காகவோ, நயந்து உதவும் - விரும்பிக் கொடுக்கும்; (புகழுவல்ல; அது போல) தீது அற்றோர் - குற்றமற்றவராகிய மேலோர், என்றும் முகமன் - எப்போதும் (தமக்கு)*

உபசார வார்த்தைகளை, இயம்பாதவர் கண்ணும் - சொல்லாதவரிடத்திலும், சென்று பொருள் கொடுப்பர் - தாமே சென்று (அவர்க்கு வேண்டும்) பொருளைக் கொடுப்பர்.

பூவிற் பொலி குழலாய் - மகடூஉ முன்னிலை.

[க-உ] பெரியோர் தமக்கு உபசார வார்த்தைகளைக் கூடச் சொல்லாதவ ரிடத்தும் தாமே வலியச் சென்று அவருக்கு உதவி செய்வர்.

**நல்லவர் வன்சொல் நல்லதே யாகும்**

2. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

[ப உ] நன்னுதால் - நல்ல நெற்றியை யுடைய பெண்ணே! ஈசற்கு – சிவபெருமானுக்கு, நல்லோன் - நற்குண முடைய சாக்கிய நாயனார், எறிசிலையோ - (அன்புடன்) எறிந்த கல்லோ, (அல்லது) ஒள் கருப்பு வில்லோன் மலரோ - ஒளியுடைய கரும்பு வில்லை யுடையவனை மன்மதன் (அன்பின்றி எறிந்த) பூவோ, விருப்பு - விருப்பத்தைத் தந்தது? (அவற்றுள் கல் விருப்பையும், மலர் வெறுப்பையும் தந்த தல்லவா? அது போல) மாசற்ற நெஞ்சுடையார் - குற்ற மற்ற மனத்தை யுடையாரது, வன் சொல் - கடுமையான வார்த்தையும், இனிது - இனியதாகும். ஏனையவர் - (தீய எண்ண முடையவர் களாகிய) மற்றையவர், பேசுறற - மொழிந்த, இன்சொல் - இனிய வார்த்தையும், பிறிது என்க - கொடியது என்று அறிந்துகொள்.

பிறிது - இனிது என்பதனின்றும் வேறுபட்டது.

[க-உ] நல்லோர் சொல்லும் வன் சொல்லும் நல்லதே யாகும்; தீயோர் சொல்லும் இன்சொல்லும் தீயதேயாம்.

**ஒன்றைப் பெறும் வகையறிந்து பெறுக**

3. தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவரால் தாங்கொள்க—தங்கநெடுங்
குன்றினுஞ் செய்தனைய கொங்கையாய் ஆவின்பால்
கன்றினுஞ் கொள்ப கறந்து.

[ப-உ] நெடு - உயரமான, தங்கக் குன்றினால் - பொன் மலையால், செய்து அனைய - செய்யப்பட்டதைப் போன்ற, கொங்கையாய் - தனங்களையுடைய பெண்ணே! ஆவின்பால் - பசுவின் பாலை, கன்றினால் - (அந்தப் பசுவின்) கன்றால், கறந்து கொள்ப - கறந்து கொள்வார்கள்; (அது போல) தங்கட்கு உதவிலர் கை - தங்களுக்கு உதவார் கையினின்றும், தாம் ஒன்று கொள்ளின் - தாங்கள் ஒரு பொருளைக் கொள்ள வேண்டினால், அவர் தங்கட்கு உரியவரால் தாம் கொள்க - அவர்களுக்கு உரியவராலே (அப் பொருளைத்) தாங்கள் கொள்ளக் கடவர்.

[க-உ] தமக்கு உதவாரிடத்தில் தாம் ஒன்றைப் பெறவேண்டின், அதனை அவருக்கு உரியவரைக் கொண்டு பெறுதல் வேண்டும்.

**உலோபிகள் பொருள் பிறருடையதாகும்**

**4.** **பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு**
**பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்—பிறர்க்குதவி**
**செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து**
**பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.**

[ப-உ] பிறர்க்குதவி செய்யா - பிறருக்கு உதவியைச் செய்யாத, கருங்கடல் நீர் - கரிய கடலின் நீரை, புயல் சென்று முகந்து - மேகம் போய் மொண்டு வந்து, பிறர்க்குப் பெய்யாக் 'கொடுக்கும் - பிறருக்குப் பெய்து கொடுக்கும்; அது போல, பிறர்க்கு உதவி செய்யார் - பிறருக்கு உபகாரம் செய்யாதவருடைய, பெருஞ் செல்வம் - பெரிய செல்வமானது, வேறு - வேறே யிருக்கும், பிறர்க்கு உதவி ஆக்குபவர் பேறும் - பிறருக்கு உபகாரம் செய்பவருடைய செல்வமாகும்.

[க-உ] உலோபிகளின் பொருள் அதனை யெடுத்து வழங்குவோரின் பொருளாகவே கொள்ளப்படும்.

**பிரிந்து கூடும் நண்பர் பெருமையுளர்**

**5.** **நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்**
**நோக்கினவர் பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்**
**நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்**
**புல்லினும் திண்மைநிலை போம்.**

[ப-உ] பூங்குழலாய் - பூக்களை முடித்த கூந்தலை யுடைய பெண்ணே! நெல்லின் உமி சிறிது நீங்கி - நெல்லினின்றும் உமியானது சிறிது நீங்கி, பழமை போல் புல்லினும் - முன் போலவே கூடினாலும், திண்மை நிலை போம் - வன்மை நிலை போய்விடும்; (அது போல) நீக்கம் அறும் இருவர் - பிரிவு இல்லாத நண்பர் இருவர், நீங்கிப புணர்ந்தாலும் - பிரிந்து (முன்போலவே) கூடினாலும், நோக்கின் அவர் பெருமை நொய்து ஆகும்-பார்க்குமிடத்து அவருடைய பெருமை அற்பமாகும்.

[க-உ] இடையே பகையால் பிரிந்து கூடும் நட்பு முன்போல வன்மையுடைய தாகாது.

காதலர் ஒற்றுமை

6. காதன் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—ஓதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி என்முகத்தாய் நோக்கருள்
கண்ணிரண்டு மொன்றையே காண்.

[ப-உ] ஓது - புகழ்ந்து கூறப்பட்ட, எண்ணிரண்டு கலை - பதினாறு கலைகளும், ஒன்றும் - பொருந்தும், மதி - சந்திரன், என் - என்று சொல்லப்பட்ட, முகத்தாய் - முகத்தை யுடையவளே! கண் இரண்டும் - இரண்டு கண்களும், நோக்கல்-பார்த்தல், ஒன்றையே - ஒரு பொருளையே யாம்; (அதுபோல) காதல் மனையாளும் - அன்புடைய மனைவியும், காதலனும் - கணவனும், மாறு இன்றி - மாறுபாடில்லாமல், தீதில் ஒரு கருமம் செய்ப - குற்றமில்லாத ஒரு கருமத்தையே செய்வர்.

தான் - அசை; காண் - முன்னிலையசை.

[க-உ] கணவனும் மனைவியும் மனம் ஒன்றுபட்டுச் செய்வதே சிறந்த இல்லறமாகும்.

கல்விச் செருக்கு

7. கடலே யனையம்யாம் கல்வியா லென்னும்
அடலே றனைய செருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்பானோர் பால்.

[ப-உ] முழங்கும் பனிக் கடலும் - சப்திக்கும் குளிர்ச்சி பொருந்திய கடலும், முனிக்கரசு கையால் - முனிவர்களுக்குத் தலைவராகிய அகத்திய முனிவர் கையால், முகந்து உண்ணப்படும் - மொண்டு பருக்கப்படும்; (ஆகையால்) யாம் - நாம், கல்வியால்-கல்வியினால், கடல் அனையம் - கடலை நிகர்ப்போம், என்னும் - என்று நினைக்கின்ற, அடல் ஏறு அனைய - வலிமை பொருந்திய ஆண் சிங்கத்தை யொத்த, செருக்கு ஆழ்த்திவிடல் - கர்வத்தில் (உங்களை) அழுத்திவிடாதீர்கள்.

[க-உ] எத்தனைப் பெருங் கல்வி யுடையவ ராயினும் செருக்கற்று இருப்பது அவருக்குச் சிறப்புடைய தாகும்.

**கோபத்தை யடக்குதல் அரிது**

**8. உள்ளங் கவர்ந்தெழுந்து ஓங்கு சினங்காத்துக்**

**தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து**
**விடுத்த லரிதோ விளம்பு.**

[ப-உ] வெள்ளம் - நீர்ப் பெருக்கை, தடுத்தலரிதோ - (அணை கட்டித்) தடுப்பது அருமையோ (அல்லது) தடம் கரை - பெரிய கரையை, பேர்த்து விடுதல் அரிதோ - உடைத்து நீரை வெளியே போகும்படி செய்தல் அருமையோ? விளம்பு - நீ சொல்வாய். உள்ளம் கவர்ந்து-மனத்தைத் தன் வயமாக்கிக்கொண்டு, எழுந்து-தோன்றி, ஓங்கு - வளர்கிற, சினம் - கோபத்தை, காத்துக்கொள்ளும் - அடக்கிக்கொள்ளும், குணமே - குணத்தையே, குணம் - அருமையான குணம், என்க - என்று சொல்வாயாக.

[க-உ] உள்ளத்தைத் தன் வயமாக்கிப் பொங்கி யெழுகின்ற கோபத்தை அடக்கிக் கொள்வதே சிறந்த குணமாகும்.

**துணை வலி**

**9. மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்**
**வலியோர் தமைத்தா மருவில்—பலியேல்**
**கடவுளவிர் சடைமேல் கட்செவியஞ் சாதே**
**படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து.**

[ப-உ] பலிஏல் - (அன்பர் செய்யும்) பூசையை ஏற்கும், கடவுள் அவிர் சடைமேல் - சிவபெருமானுடைய விளங்குகின்ற

சடையின்மேல் அணியப்பட் டிருக்கின்ற, கட்செவி - பாம்பானது, படர்சிறைய - படர்ந்த சிறகினையுடைய, அப்புள் ளரசைப் பார்த்து- அந்தப் பறவைகளுக்கு அரசாகிய கருடனைக் கண்டு, அஞ்சாது - பயப்படாது; (அதுபோல) மெலியோர் - வலிமை யில்லாதவா, வலிய விரவலரை - வலிமையையுடைய பகைஞரை (நோக்கி) அஞ்சார் - பயப்படமாட்டார்.

[க-உ] பகைவர் வலிமை யுடையவரானபோது, மெலியோர், அவரைக் காட்டிலும் மிக்க வலிமை யுடையவரைச் சேர்ந்திருந்தால் அவருக்கு ஆபத்து இல்லை.

**பிறர் துயர் போக்கும் பெருந்தகையாளர்**

**10. தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்**
**வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்**
**கறையிருளை நீக்கக் கருதா துலகில்**
**நிறையிருளை நீக்குமே நின்று.**

[ப-உ] திங்கள் - சந்திரன், கறை யிருளை - தன்னிடத்துள்ள களங்கமாகிய இருட்டை, நீக்கக் கருதாது - போக்க நினைக்காமல், மேல் நின்று - ஆகாயத்தில் இருந்துகொண்டு, உலகில் நிறை யிருளை- உலகின்கண் நிறைந்துள்ள இருட்டை, நீக்கும் - போக்குவான்; (அதுபோல) விழுமியோர் - சிறந்த குணமுடைய பெரியோர், தம் குறை - தம்முடைய துன்பங்களை, தீர்வு உள்ளார் - நீக்குதல் பற்றி நினையாராகி, தளர்ந்து - (மனம்) உருகி, பிறர்க்குஉறூம் - பிறர்க்கு உண்டாகும், வெம் குறை - கொடிய துன்பத்தை, தீர்க் கிற்பர் - போக்குவர்.

உள்ளார் - முற்றெச்சம். குறை இங்குத் துன்பத்தை உணர்த் தியது.

[க-உ] மேலோர் தமது துன்பத்தைப் போக்க முயலாமல் பிறர்க்கு உண்டாகும் கொடிய துன்பத்தைப் போக்குவர்.

**மெய்யறிவுடையோர் மேன்மை**

**11. பொய்ப்புலன்க ளைந்துநோய் புல்லியர்பா லன்றியே**
**மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம்—துப்பின்**
**சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறை வளிபோய்ச்**

[ப-உ] சூறுவளி - சுழல் காற்று, போய் - சென்று, சிறுபுல் துரும்பு - சிறிய நொய்தாகிய துரும்பை, சுழற்றும் - (எடுத்துச்) சுழற்றும்; (ஆனால் அதுவே) துப்பின் - (தனது) வலிமையால், கல் தூணை - கல்லினால் செய்யப்பட்ட தூணை, சுழற்றும் கொல் - சுழற்றுமோ? (சுழற்றாது; அதுபோல), பொய்ப் புலன்கள் ஐந்தும் - பொய்யாகிய இந்திரியங்கள் ஐந்தும், புல்லியர் பாலன்றியே-புல்லறிவாளரிடத் தல்லாமல், மெய்ப்புலவர் தம்பால் - மெய்யறிவுடையவரிடத்து, நோய் விளையா - துன்பத்தைச் செய்யா.

ஏ, ஆம் அசைகள்.

[க-உ] கீழோரே யன்றி, மேலோர் இந்திரியங்களால் துன்ப மடையார்.

**ஓட்டை உடலில் உயிர், ஒழுகாது நிற்றல்**

**12.** **வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பில்**
**பொருந்துத லுனே புதுமை—திருந்திழாய்**
**சீதநீர் பொள்ளல் சிறுகுடத்து நில்லாது**
**வீதலோ நிற்றல் வியப்பு.**

[ப-உ] திருந்து இழாய் - திருந்திய ஆபரணத்தை யுடைய பெண்ணே! சீதநீர் - குளிர்ச்சியான நீரானது, பொள்ளல் சிறு குடத்து-இல்லியை யுடைய சிறிய குடத்திலே, நில்லாது வீதலோ-நில்லாமல் ஒழுகிப் போதலோ, (ஆச்சரியம்) நிற்றல் வியப்பு-நிற்றல் ஆச்சரியமாகும்; (அதுபோல) வருந்தும் உயிர் - வருந்துகின்ற உயிரானது, ஒன்பான் வாயில் - ஒன்பது துவாரங்களையுடைய, உடம்பில் - உடலிலே, பொருந்துதலே புதுமை-(ஓடிப்போகாமல்) தங்கியிருத்தலல்லவா, புதுமை-ஆச்சரியம்? (அவ்வுயிர் தங்காமல் ஓடிப் போகுதல் ஆச்சரியமன்று.)

தான்-அசை.

[க-உ] உயிரானது ஒன்பது துவாரமுடைய உடம்பினின்றும் ஓடிப் போகாமல் இருத்தலே ஆச்சரியமாகும்.

**ஒல்லும் வகையான் உதவுக**

**13.** **பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப**
**விருப்பமொடு கொடுப்பர் மேலோர்—சுரக்கும்**

**மலையளவு நின்றமுலை மாதே மதியின்**
**கலையளவு நின்ற கதிர்.**

[ப-உ] மலையளவு நின்ற சுரக்கும் முலைமாதே - மலையளவாக நின்ற (பாலைச்) சுரக்கின்ற தனங்களையுடைய பெண்ணே! மதியின்- சந்திரனுடைய, கதிர் - கிரணங்கள், கலையளவு நின்ற - (வளர்தலையும் தேய்தலையும் உடைய) கலைகளின் அளவாக நின்றன; (அது போல) மேலோர் - பெரியோர், பெருக்க மொடு - மிகுதியாகவும், சுருக்கமொடு-சுருக்கமாகவும், பெற்ற - தாம் அடைந்த, பொருட்கு ஏற்ப - செல்வத்திற்குத் தகுந்தாற்போல், விருப்பமோடு-அன்போடு, கொடுப்பர்- கொடுப்பார்கள்.

[க-உ] மேலோர் தம்மிடத்துள்ள பொருளுக்குத் தக்கபடி ஏழைகளுக்கு விருப்பமுடன் உதவுவர்.

***செல்வச் செருக்கு***

**14. தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மென்று**
**தலையா யவர்செருக்குச் சார்த—லிலையா**
**லிரைக்கும்வண் டூதுமல ரீங்கோதாய் மேரு**
**வரைக்கும்வந் தன்று வளைவு.**

[ப-உ] இரைக்கும் - ஒலிக்கின்ற, வண்டு ஊதுமலர் - வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற மலர்களாலாகிய, ஈர்ங்கோதாய் - குளிர்ச்சி பொருந்திய மாலையை யணிந்தவளே! மேருவரைக்கும - (அசைக்க முடியாத) மகா மேரு மலைக்கும், வளைவு வந்தன்று - (ஒரு காலத்தில்) வளைவு வந்தது; (ஆகையால்) தலையாயவர் - சிறந்த அறிவினையுடையோர், தொலையா - அழியாத, பெருஞ் செல்வத் தோற்றத் தோம் என்று - பெரிய செல்வத்தில் தோன்றி யிருக்கின்றோம் என்று, செருக்குச் சார்தல் இலை - கருவமடைதல் இல்லையாம். [ஆம் -

மேரு மலைக்கு வளைவு வந்தது :— சிவன் திரிபுர சம்மாரம் செய்ய மேரு மலையை வில்லாக வளைத்தது இங்குக் குறிக்கப் பட்டது.

[க-உ] சிறந்த அறிவினையுடையோர், செல்வச் செருக்கடை

*அன்பிலார்க்குச் செல்வத்தால் பயனில்லை*

15. இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

[ப-உ] நல்லாய் - நற்குண முடையவளே! மொழியிலார்க்கு - வசனிக்கும வார்த்தை இல்லாத ஊமைகளுக்கு, முதுநூல் ஏது - பழமையான நூல் யாது பயனைச் செய்யும்? தெரியும் விழியிலார்க்கு - பார்க்கும் கண் இல்லாத குருடர்களுக்கு, விளக்கு ஏது - தீபம் யாது பயனைச் செய்யும்? (ஒரு பயனையும் செய்யாது; அது போல) இங்கு அன்பு இல்லானுக்கு - இவ்வுலகில் அன்பு இல்லாதவனுக்கு, இடம் - வீடும், பொருள் - பணமும், ஏவல் - வேலைக் காரர்களும் ஆகிய, எல்லாம் - இவை எல்லாம இருந்தும், அவற்கு என் செய்யும் - அவனுக்கு யாது பலனைச் செய்யும்? (ஒன்றும் செய்யா) [மற்று - அசை.]

[க-உ] அன்பு இல்லாத ஒருவனுக்கு இடம் பொருள் ஏவல் முதலிய செல்வங்கள் இருந்தும் பயனில்லை.

*மேலோர் தம் பெருமை நோக்கார்*

16. தம்மையுந் தங்கள் தலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மின்
இழியினும் செல்வ ரிடர்தீர்ப்பர் அல்கு
கழியினும் செல்லாதோ கடல்.

[ப-உ] கடல் - சமுத்திரமானது, அல்கு கழியினும் - (தன்னை யடுத்த) சிறிய உப்பங் கழியிலும், செல்லாதோ - பாயாதோ? (பாயும்; அதுபோல) உயர்ந்தோர் - அறிவு ஒழுக்கங்களால் மேன்மை யானவர், தமையடைந்தோர் - தங்களைச் சரணாக அடைந்தவர்கள், தம்மின் இழியினும் - தங்களைப் பார்க்கிலும் தாழ்வுடையவர்களாயினும், தம்மையும் தங்கள் தலைமையும் பார்த்து தம்மை மதியார் - தங்களையும் தங்கள் உயர்வையும் பார்த்து மதியாதவர்களாகி, செல்வர் இடர்தீர்ப்பர் - (அவரிருக்கு மிடத்திற்குத் தாமே வலியச்) சென்று, (அவரது) துன்பத்தைப் போக்குவர். [செல்வர் — முற்றெச்சம.]

[க-உ] மேலோர் தம்மை அண்டியவர் தாழ்ந்தவராயினும், தங்கள் பெருமையை நோக்காமல் அவர் துன்பத்தை நீக்குவர்.

ஈகை, நற் குடியின் குணமாம்

17. எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ—பைந்தொடீஇ

கன்றும் உதவுங் கனி.

[ப-உ] பைந்தொடீஇ - பசும் பொன்னால் செய்யப் பட்ட வளையல்களையுடைய பெண்ணே! நின்று - (குலை தள்ளுவதற்கு முன்பு அழியாது) நின்று, பயன் உதவி - (பழமாகிய) பயனைக் கொடுத்து, (பின்பு) நில்லா அரம்பையின் கீழ் - அழிகின்ற வாழை மரத்தின் கீழ், கன்றும் - (முளைத்த) கன்றும், கனி உதவும் - பழத்தைக் கொடுக்கும்; (ஆகையால்) எந்தை - எமது தந்தை, இரப்பார்க்கு - யாசிப்பவருக்கு, ஈந்து - கொடுத்து, நல்கூர்ந்தான் என்று - வறிஞனான் என்று நினைத்து, அவன் மைந்தர் - அவனுடைய மக்கள், தம் ஈகை - தமது அறச் செயலை, மறுப்பரோ - விட்டுவிடுவாரோ? (விடார்.)

[க-உ] கொடுத்து வறியனாயினன் தம் தந்தை என்று அவன் மைந்தர் ஈகையைக் கைவிடார்.

இன்சொல்லும் வன்சொல்லும்

18. இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலா லென்றும் மகிழாதே—பொன்செய்
அதிர்வளையாய் பொங்கா தழல்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்குங் கடல்.

[ப-உ] பொன்செய் - பொன்னால் செய்யப்பட்ட, அதிர் வளையாய் - ஒலிக்கின்ற வளையலை யுடையவளே! கடல் - சமுத்திரம், தண்ணென் கதிர் வரவால் - குளிர்ச்சி பொருந்திய சந்திரனுடைய வருகையால், பொங்கும் - மேலெழும்; அழல் கதிரால் - வெப்பம் பொருந்திய சூரியனுடைய வருகையால், பொங்காது - மேலெழாது; (அதுபோல) இரு நீர் வியன் உலகம் - மிக்க நீரையுடைய கடலால் சூழப் பெற்ற பரந்த உலகத்தி லுள்ளவர், இன் சொலால் அன்றி -

இனிய சொற்களால் அல்லாமல், வன்சொலால் - கடுஞ் சொற்களால், என்றும் மகிழாதே - எப்போதும் மகிழ்ச்சி யடையார்.

ஏ-அசை.

[க-உ] இனிய சொற்களால் அல்லாமல் கடும் சொற்களால் உலகத்தாரை நாம் மகிழ்விக்க முடியாது.

நல்லோர் வருகையை நல்லவர் நயப்பர்

19. நல்லோர் வரவால் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வரவான் அழுங்குவார்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர.

[ப-உ] தேமா - இனிய கனிகளைத் தரும் மாமரம், தென்றல் வர - தென்றல் காற்று வர, தளிர்காட்டி - தளிரை விட்டு, திருந்தும் - அழகுடன் விளங்கும், சுழல் கால் வர - சுழல் காற்று வர, வருந்தும் - துன்பமுறும்; வல்லோர் - கல்வியறிவுகளால் வல்லவா், நல்லோர் வரவால் - நல்லவருடைய வருகையால், நகைமுகம் கொண்டு - முக மலர்ச்சி கொண்டு, இன்புறீஇ - இன்பத்தை யடைந்து, அல்லோர் வரவான் - தீயவருடைய வருகையால், அழுங்குவர் - துன்பத்தை யடைவர்.

[க-உ] நல்லவர், தங்களைப் போன்ற நல்லவரைக் கண்டால் மகிழ்ச்சியும், தீயவரைக் கண்டால் துன்பமும் உறுவர்.

பிறர் துயர் தமதாக் கொள்வர் பெரியோர்

20. பெரியவர்தந் நோய்போல் பிறர்நோய் கண்டுள்ளம்
எரியின் இழுதாவ ரென்க—தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

[ப-உ] தெரியிழாய் - ஆராய்ந்த ஆபரணத்தை யுடையவளே! கண் - கண்கள், மண்டு பிணியால் - நெருங்கிய நோயால், வருந்து பிறவுறுப்பைக் கண்டு - வருந்துகின்ற மற்றைய உறுப்புக்களைப் பார்த்து, கலுழும் - அழும்; (அதுபோல) பெரியவர் - (நல்லொழுக்கத்தால் சிறந்த) பெரியோர், பிறர் நோய் கண்டு - பிறருடைய நோயைப் பார்த்து, தம் நோய் போல் - தமக்கு வந்துள்ள

நோயைப் போல (எண்ணி) உள்ளம் - மனம், எரியின் - நெருப்பில பட்ட, இழுது - நெய்யைப் போல், ஆவர் - உருகுவர்.

[க-உ] பெரியோர், பிறர்க்கு நேரும் துன்பங் கண்டு மனம் உருகுவர்.

### இலக்கணத்தின் மாண்பு

**21. எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்**
**எழுத்தறிவார் காணின் இலையாம்—எழுத்தறிவார்**
**ஆயுங் கடவு ளவிர்சடைமுன் கண்டளவில்**
**வீயுஞ் சுரநீர் மிகை.**

[ப-உ] சுரநீர்மிகை - ஆகாய கங்கையின் பெருக்கம், எழுத்து - ஏ கா ட் ச ர ம் என்னும் பிரணவத்தின் இயல்பினை, அறிவார் - (ஆராய்ந்து) அறியும் மெய்ஞ்ஞானிகள், ஆயும் - ஆராய்ந்தறிகின்ற, கடவுள் - சிவபெருமானது, அவிர் சடை - விளங்குகின்ற சடையினை, முன் - (தன்) முன்னே, கண்ட அளவில் - கண்ட மாத்திரத்தில், வீயும் - அடங்கிவிடும்; (அதுபோல) எழுத்து அறியார் - இலக்கண நூலை கற்றுணராதவருடைய, கல்விப் பெருக்கம் - கல்வியின் மிகுதி, அனைத்தும் - முழுமையும், எழுத்து அறிவார் காணின் - இலக்கண நூலைக் கற்றுணர்ந்தவர் கண்ட விடத்து, இலையாம் - (சிறந்து விளங்குதல்) இல்லையாம்.

ஆம் - அசை, ஏகாட்சரம்—(ஓம் என்னும்) ஓரெழுத்து.

[க-உ] இலக்கண ஞானம் இல்லாதவர் கல்வி, இலக்கண ஞானம் உடையவர் முன்னிலையில் பயன்படுவதில்லையாம்.

### உயர்வு தாழ்வு பிறப்பால் வருவ தில்லை

**22. ஆக்கும் அறிவா னலது பிறப்பினுன்**
**மிக்கொள் உயர் விழிவுவேண்டற்க—நீக்கு**
**பவரார் அரவின் பருமணிகண் டென்றுங்**
**கவரார் கடலின் கடு.**

[ப-உ] அரவின் - நாகப் பாம்பின் னின்றும் (உண்டாகிய) பருமணி - பருத்த மாணிக்கத்தை, கண்டு - பார்த்து, நீக்குபவர் ஆர் - (இது நமக்கு வேண்டுவதன் றென்று) தள்ளுபவர் ஆர்? (எவரும் இல்லை; ஆனல்) கடலின் - பாற் கடலில் உண்டான, கடு -

நஞ்சை, என்றும் - எக் காலத்தும், கவரார் - கொள்ளார்; (ஆகை யால்) மீக்கொள் உயர்வு இழிவு - மேலாகக் கொள்ளுகின்ற இழிவை யும், கீழாகக் கொள்ளுகின்ற இழிவையும், ஆக்கும் அறிவானலது - நற்குணங்களை உண்டாக்குகின்ற கல்வி யறிவி னல்லாமல், பிறப் பினல் வேண்டற்க - பிறப்பினல் விரும்பா திருக்கக் கடவீர்.

[க-உ] ஒருவன் உயர்வதும் தாழ்வதும் கல்வி யறிவினல் அல்லாமல் பிறப்பினலல்ல.

**தவத்திற்குக் கேடு தையலார் உறவு**

**23. பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்றல்**
**திகழ்ச்சிதரு நெஞ்சத் திட்பம்—நெகிழ்ச்சி**
**பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகால்**
**எறும்பூரக் கற்குழி யுமே.**

[ப-உ] பூரிக்கின்ற முலைப் பேதாய் - விம்முகின்ற தனங்களை யுடைய பெண்ணே! பலகால் எறும்பூர - பல முறை சிற்றெறும்பு கள் ஊர்ந்து போவதால், கல் - கருங்கல்லும், குழியும் - குழிந்து போய்விடும்; (அதுபோல) மடவார் - பெண்களிடத்தில், பகர்ச்சி - பேச்சளவு, பயில - பழகி வர, நோன்பு ஆற்றல் - (ஒருவன்) தவம் செய்வதால், திகழ்ச்சி தரும் - விளங்குகின்ற, நெஞ்சத் திட்பம் - மன வுறுதி, நெகிழ்ச்சி பெறும் - தளர்ச்சியை அடையும்.

[க-உ] தவம் செய்பவர் பெண்களோடு பேசும் பழக்க முடை யவராயின், அவரது மனத்தின் உறுதி கெட்டுவிடும்.

**குணம் நீங்கிக் குற்றமே கொள்வர் கீழோர்**

**24. உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்**
**கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டு மலர்ச்**
**சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்றே**
**காக்கை விரும்புங் கனி.**

[ப-உ] செழும் பொழில்வாய் - செழுமையாகிய சோலையில், வண்டு - வண்டுகள், மலர் சேக்கை - மலராகிய படுக்கையை, விரும்பும் - விரும்பி யடையும் (ஆனல்), காக்கை விரும்பும் கனி - காகம் இச்சிக்கும் பழம், வேம்பன்றே - வேம்பல்லவா? (அது போல), இங்கு - இவ்வுலகில், ஒருவர்க்கு - ஒருவரிடத்தில், குணம்

உண்டு எனினும் - நற்குணம் இருப்பதாயினும், கீழ் - கீழ் மக்கள், கொண்டு புகல்வது - எடுத்துப் பேசுவது, அவர் குற்றமே - அவர் குற்றத்தையே யாகும்.

[க-உ] கீழ் மக்கள் பிறருடைய நற் குணத்தை வியந்து பேசாது, தீக் குணத்தையே விரித்துப் பேசுவர்.

கற்றூர் கல்லாரைச் சேர்தல்

25. கல்லா அறிவிற் கயவர்பால் கற்றுணர்ந்த

கணையில் பொலியுங் கருங்கணுய் நொய்தாம்
புணையில் புகுமொண் பொருள்.

[ப-உ] வில்லார் கணையின் - வில்லோடு கூடிய அம்பைப் போல, பொலியுங் கருங் கண்ணுய் - (புருவத்தோடு கூடி) விளங்குகின்ற கருமையாகிய கண்களை யுடையவளே, புணையில் புகும் - (கனமில்லாத) தெப்பத்தில் சேரும், ஒள் பொருள் - (கனமுடைய) சிறந்த பொருள், நொய்தாம் - இலகுவாகும்; (அது போல), கல்லா அறிவின் - கற்காத அறிவினை யுடைய, கயவர் பால் - மூடரிடத்தில், கற்றுணர்ந்த நல்லார் - (நூல் பல) கற்றறிந்த மேலோர் (சேருவாராயின்), தமது கனம் - தமது பெருமையை, நண்ணார் - அடையார்.

ஏ - அசை

[க-உ] கற்றறிந்த மேலோர் கீழோரைச் சேர்ந்தால், தமது பெருமையை இழப்பர்.

உருவு கண்டு மதித்த லாகாது

26. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான்
விண்ணளவா யிற்றே விளம்பு.

[ப-உ] மடவரால் - மடப்பத்தை வாய்ந்த பெண்ணே! கதிர் காணும் ஒளி - சூரிய பிரகாசத்தோடு கூடி காண்கின்ற கருமணியின் ஒளியானது, கண் அளவாய் நின்றதோ - (தனக்கு இடமாகிய சிறிய) கண்ணின் அளவாகப் பொருந்தி நின்றதோ? விண்ணளவாயிற்றே - (தான் காணும்) ஆகாயத்தின் அளவாகப் பரவி நின்றதோ?

விளம்பி - நீ சொல்வாயாக; (அதுபோல) ஒள் புலவர் - ஒள்ளிய புலவருடைய, உடலின் சிறுமை கண்டு - உடம்பின் சிறிய வடிவத்தைக் கண்டு, கல்விக் கடலின் - (அவருடைய) கல்வியாகிய கடலின் பெருமையை (ஒருவரும்) கடக்கமாட்டார்.

[க-உ] உருவத்தால் சிறியவர் என்று அவமதித்தலாகாது.

பலன் கருதாமல் உதவுக

27. கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாம் செய்வர்—அம்மா
முளைக்கும் எயிறு முதிர் சுவைநா விற்கு
விளைக்கும் வலியன தாம் மென்று.

[ப-உ] முளைக்கும் - முளைக்கின்ற, எயிறு - பற்கள், நாவிற்கு - நாக்குக்கு, வலியன - வலிய தின்பண்டங்களை, தாம் - தாமே, மென்று - மென்று தந்து, முதிர் சுவை - முதிர்ந்த சுவையை, விளைக்கும் - கொடுக்கும்; (அவ்வாறே) கற்று - படித்து, அறிந்தோர் - நீதியை தெரிந்தவர்கள், கைம்மாறு - பதில் உபகாரத்தை, உகவாமல் - விரும்பாமலே, மெய்வருந்தி - (தமது) உடல் வருந்தி, தம்மாலியல் உதவி - தங்களால் கூடிய உதவிகளை, தாம் செய்வர் - தாங்களே செய்வார்கள்.

[க-உ] கற்றறிந்த மேலோர் பிரதி யுபகாரம் கருதாமல் பிறர்க்கு உதவி செய்வர்.

பேரறிவுடையோர் இயல்பு

28. முனிவினும் நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினும் ஆகுங் கதலிதா னெட்டி பழுத்
தாயினும் ஆமோ அறை.

[ப-உ] கதலி - வாழைமரம், (தான் ஈனும்) நனி விளைவு இல் - நன்றாக முற்றாத, காயினும் - காயாக இருந்தாலும், ஆகும் - பயன் படும், எட்டி பழுத்தாயினும் - எட்டிக் காயானது நன்றாகப் பழுத்தாலும், ஆமோ - பயன் படுமோ? அறை - கூறுவாய். (அவ்விதமே) மூதறிஞர் - பேரறிவுடையோர், முனிவினும் - கோபமுற்ற போதும், நல்குவர் - (இரப்பார்க்கு இல்லை யென்னாது) கொடுப்பர்;

கயவர் - அற்பர்கள், உள்ளக் களிவினும் - மன மகிழ்ச்சி யடைந் துள்ள காலத்திலும், நல்கார் - (எவர்க்கும் ஒன்றும்) கொடார்.

தான் - அசை.

[க-உ] மேன் மக்கள் தாம் கோபமா யுள்ள போதும் பிறர்க்கு உதவி செய்வர்; கீழ் மக்கள் தாம் மகிழ்ந்து இருக்கும் போதும் கொடுக்க மாட்டார்கள்.

ஞானிக் கில்லை நடுங்குறு துயரம்

29. உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கும் ஒருகோடி யாக—நடுக்க முறார்
பண்ணிற் புகலும் பனிமொழியாய் அஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

[ப-உ] பண்ணின் புகலும் - ராகம் போல வசனிக்கின்ற, பனி மொழியாய் - குளிர்ச்சி பொருந்திய சொல்லை யுடைய பெண்ணே! மதிமான் - சந்திரனிடத் திருக்கின்ற மானனது, மண்ணில் புலியை அஞ்சுமோ - பூமியில் உள்ள புலிகளுக்குப் பயப்படுமோ? (பயப்படாது; அது போல), நெஞ்சு - (தமது) மனம், ஓங்கு பரத்து உற்றோர் - உயர்ந்த பரம் பொருளிடத்து அழுந்தப் பெற்ற ஞானிகள், உடற்கு - (தம்) உடலுக்கு, வரும் இடர் - வருகின்ற துன்பங்கள், அடுக்கும் - ஒன்றன் பின் ஒன்றாக அடுக்கிய, ஒரு கோடியாக - ஒரு கோடி அளவினதாக (இருப்பினும், அதற்கு அஞ்சி) நடுக்கமுறார் - நடுங்க மாட்டார்.

[க-உ] பரம்பொரு ளிடத்துத் தமது மனத்தைப் பதிய வைத்தவர் தமக்கு வரும் துன்பங்களுக்கு அஞ்சார்.

விரைந்து அறம் செய்க

30. கொள்ளுங் கொடுங்கூற்றம் கொள்வான் குறுகுதன் முன்
உள்ளங் கனிந்தறஞ் செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்னர் அணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் பேசு.

[ப-உ] வெள்ளம் வருவதற்கு முன்னர் - வெள்ளம் பெருகி வருவதற்கு முன்னே, அணைகோலி வையார் - கரையைக் கட்டி வைக்காதவர்கள், பெருகுதற்கண் என் செய்வார் - பெருகியெடுத்து

வரும்போது என்ன செய்வார்கள்? பேசு - சொல்லு (ஆகையால்) கொள்ளும் கொடுங் கூற்றம் - உயிரைக் கொண்டு போகும் கொடுமை யான யமன், கொல்வான் குறுகுதன்முன் - கொல்லும்படி வருவ தற்கு முன்பு, உள்ளம் கனிந்து - மனம் உருகி, அறம் செய்து உய்க - தருமத்தைச் செய்து பிழைப்பாயாக.

[க-உ] யமன் வருமுன் விரைந்து அறம் செய்தல் வேண்டும்.

*பிறர் துன்பம் தாங்குவர் பெரியோர்*

**31. பேரறிஞர் தாக்கும் பிறர் துயரம் தாங்கியே**
**வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்**
**மெய்சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்**
**கைசென்று தாங்குங் கடிது.**

[ப-உ] நேர் இழாய் - அழகிய ஆபரணத்தை யுடையவளே! மெய் சென்று - உடம்பி னிடத்தேபோய், தாக்கும் - தாக்குகின்ற வியன்கோல் அடி - பெரிய கோலினுடைய அடியை, கை - கைகள், கடிது - விரைவாக, சென்று - போய், தன் மேல் தாங்கும் - தன் மீது (படும்படி) தாங்கிக் கொள்ளும்; (அது போல) பேர் அறிஞர் - சிறந்த அறிவுடைய பெரியோர், தாக்கும் - வருத்துகின்ற, பிறர் துயரம் - பிறரது துன்பத்தை, வீ ர மொ டு - ஆண்மையோடு, தாங்கி - (தாம்) ஏற்றுக் கொண்டு, காக்க - (அவரைப்) பாதுகாத்தல் பொருட்டு, விரைகுவர் - விரைந்து செல்வர்.

[க-உ] மேலோர், பிறருடைய துன்பத்தைத் தாம் ஏற்றுக் கொண்டு அவரைக் காப்பர்.

*அறிவிலார் செய் அறங்கள்*

**32. பன்னும் பனுவல் பயன்தேர் அறிவிலார்**
**மன்னும் அறங்கள் வலியிலவே—நன்னுதால்**
**காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ**
**தாழொன் றிலதாயிற் றுன்.**

[ப-உ] நல்நுதால் - நல்ல நெற்றியை யுடையவளே! காழ் ஒன்று - வைரம் பொருந்திய, உயர்திண் கதவு - சிறந்த வலிமையை யுடைய கதவானது, தாழ் ஒன்று இலது ஆயின் - ஒரு தாழ்ப்பாள்

இல்லாததாயின், வலி யுடைத்தோ - உறுதியை யுடைத்தாகுமோ? (ஆகாது; அது போல) பன்னும் பனுவல் - சிறப்பித்துச் சொல்லப் படுகின்ற நூல்களின், பயன்தேர் - பொருளை அறியும், அறிவிலார் - விவேக மில்லாதவர் (செய்யும்) மன்னும் அறங்கள் - மிகுந்த தருமங் கள், வலியிலவே - உறுதி யற்றனவே யாகும்.

தான் - அசை.

[க-உ] நூல் பொருள் உணர மாட்டாதார் செய்யும் அறங்கள் பயனில வாகும்.

*பெரியோர், தம்மைப் போற்றிடார்*

**33. எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்**
**விள்ளா வறிஞரது வேண்டாரே—தள்ளாக்**
**கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்**
**கரைகாப் புளதோ கடல்.**

[ப-உ] நீர் - தண்ணீரை, கட்டு குளம் - கட்டி வைக்கும் குளம், தள்ளா - நீக்கப் படாத, கரைகாப்பு உளது - கரையாகிய காவலை உடையதா யிருக்கிறது; அன்றி - அல்லாமல், கடல் - சமுத் திரமானது, கரை காப்பு உளதோ - கரையாகிய காவலை யுடை யதோ? (இல்லை; அதுபோல) இழிஞர் - கீழோர், எள்ளா திருப்ப - (தம்மைப் பிறர்) இகழாமல் இருக்குமாறு, போற்றற் குரியர் - காக் கப் படுதற் குரியவ ராவார்; விள்ளா அறிஞர் அது வேண்டார் - நீங் காத அறிவை யுடைய பெரியோர் அங்ஙனம் காக்கப் படுதலை விரும்பார்.

[க-உ] அறிவற்றவர்கள் தம்மை மற்றவர் இகழாதிருக்கும்படி பாதுகாத்துக் கொள்ளல் வேண்டும்; அறிவுடையோர்க்கு அது வேண்டுவதில்லை.

*அறிவுடையார் அஞ்சுவர் பழிக்கு*

**34. அறிவுடையா ரன்றி அதுபெறுர் தம்பால்**
**செறிபழியை அஞ்சார் சிறிதும்—பிறைநுதால்**
**வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறை குருட்டுக்**
**கண்ணஞ்சு மோ இருளைக் கண்டு.**

[ப-உ] பிறை நுதால் - பிறைச் சந்திரனைப் போன்ற நெற் றியை யுடைய் பெண்ணே! வண்ணம் செய் - அழகு செய்கின்ற,

வாள் விழியே யன்றி - ஒளி பொருந்திய கண்களே அல்லாமல், மறை - ஒளி மறைந்த, குருட்டுக் கண் - குருட்டுக் கண்கள், இருளைக் கண்டு - இருட்டைப் பார்த்து, அஞ்சுமோ - பயப்படுமோ? (பயப் படா; அது போல) அறிவுடையார் அன்றி - அறிவை யுடைய வர்களே யல்லாமல், அது பெறார் - அந்த அறிவைப் பெறாதவர், தம்பால் செறி பழியை - தங்களிடம் நெருங்கும் பழியை, சிறிதும் அஞ்சார் - சிறிதளவும் அஞ்ச மாட்டார்.

[க-உ] அறிவுடையார் பழிக்கு அஞ்சுவர்; அறிவில்லாதவர் அஞ்ச மாட்டார்.

#### மேலோர் கற்றவரை விரும்புவர்

**35.** **கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்**
**மற்றையர்தாம் என்றும் மதியாரே—வெற்றி நெடும்**
**வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி**
**பால் வேண்டும் வாழைப் பழம்.**

[ப-உ] வெற்றி நெடும் வேல் - வெற்றியை யுடைய, நீண்ட வேலாயுதத்தை, வேண்டும் - (குணம் செயல்களால்) ஒக்கும், வாள் விழியாய் - ஒளி பொருந்திய கண்களை யுடையவளே! வாழைப்பழம் - வாழைப்பழத்தை, பால் வேண்டும் - பால் விரும்புவதாம்; புளிங் காடி - புளிப்பை யுடைய காடி நீரானது, வேண்டா - (அவ் வாழைப் பழத்தை) விரும்பாது; (அது போல) மேன் மக்கள் - மேலோர், கற்ற - (சிறந்த நூல்களைக்) கற்ற, அறிவினரை - அறிவுடையவர் களை, காமுறுவர் - விரும்புவர்; மற்றையர் - அறிவில்லாதவர்கள் (அவ் வறிவினரை), என்றும் மதியார் - எப்போதும் மதிக்க மாட்டார்.

வேண்டும் - உவம உருபு.

தாம், ஏ - அசைகள்.

[க-உ] மேன்மக்கள் கற்றவரை விரும்புவர்; கீழோர் அவரை விரும்பார்.

#### தக்கார்க்கு ஈவதே உதவி

**36.** **தக்கார்க்கே ஈவர் தகார்க் களிப்பா ரில்லென்று**
**மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்**
**நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி**
**புல்லுக் கிறைப்பரோ போய்.**

[ப-உ] எக்காலும் - எந்நாளும், நீர் - நீரை, நெல்லுக்கு - நெற் பயிருக்கு, இறைப்பதே அன்றி - இறைப்பார்களே யல்லாமல், காட்டு - காட்டிலுள்ள, முளி புல்லுக்கு - உலரும் புல்லுக்கு, போய் இறைப்பரோ - சென்று இறைப்பார்களோ? (இறைக்க மாட்டார்கள்; அது போல) தக்கார்க்கே - தகுதி யுடையவருக்கே, ஈவர் - ஒன்றினைச் கொடுப்பர்; தகார்க்கு - தகுதி யில்லாதவருக்கு, அளிப்பார் இல் என்று - கொடுப்பவர் (உலகில்) இல்லை என்று (எண்ணி) விழுமியோர் - மேலோர், மிக்கார்க்கு - ஒழுக்க நெறி கடந்தவர்க்குக் கொடார்.

மிக்கார் - (நெறி) கடந்தவர்.

[க-உ] மேலோர், தகுதி யுடையவர்க்கே யன்றித் தகுதி யில்லாதவர்க்கு ஈயார்.

**தன்னைச் சிறப்பிப்பான் தாழ்வு**

**37.** **பெரியார்முன் தன்னைப் புனைந்துரைத்த பேதை**
**தரியா துயர்வகன்று தாழும்—தெரியாய்கொல்**
**பொன்னுயர்வு தீர்த்த புணர் முலையாய் விந்தமலை**
**தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.**

[ப-உ] பொன்னுயர்வு - இலக்குமியின் (அழகின்) சிறப்பை தீர்த்த - (தனது பேரழகினால்) போக்கிய, புணர் முலையாய் - நெருங்கிய முலைகளை யுடையவளே! விந்தமலை - (அகத்திய முனிவர் முன்னே தன்னைச் சிறப்பித்துப் பேசிய) விந்தமலையானது, தாழ்ந்து - (அவர் தம் கையினால் ஊன்றியழுத்த அதனால் பாதலத்தில்) தாழ்ந்து, தன்னுயர்வு தீர்ந்தன்று - தனது சிறப்புத் தீர்ந்து விட்டது; தெரியாய் கொல் - (அதனை நீ) அறியாயோ? (அது போல) பெரியார் முன் - (கல்வி கேள்விகளால் சிறந்த) பெரியார் முன்பு, தன்னைப் புனைந்துரைத்த பேதை - தன்னைச் சிறப்பித்துப் பேசிய அறிவில்லாதவன், உயர்வு தரியாது - மேன்மையைத் தாங்க மாட்டாது, அகன்று தாழும் - இழந்து தாழ்ச்சியை யடைவான்.

[க-உ] பெரியவர் முன்பு தன்னைப் புகழ்வான் தாழ்வினை யடைவான்.

நல்லவர் கேண்மை

38. நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை யாகாதே—நல்லாய்கேள்
காய் முற்றின் தின்றீங் கனியாம் இளந்தளிர் நாள்
போய் முற்றின் என்னாகிப் போம்.

[ப-உ] நல்லாய் - நற்குணமுடைய பெண்ணே! கேள் - கேட்பாயாக, காய்முற்றின் - (நாள் சென்று) காயானது முற்றினால், தின் தீம் கனியாம் - தின்பதற்குரிய மதுரமுடைய பழமாகும்; இளந் தளிர் - இளமையான தளிர் (இலை), நாள் போய் முற்றின் - நாள் சென்று முற்றினால், என்னாகிப் போம் - யாதாகிப் போகும்? (அது போல) நல்லார் செயும் கேண்மை - நல்லவர் செய்கின்ற நட்பு, நாள்தோறும் - ஒவ்வொரு நாளும், நன்று ஆகும் - நன்றாக வளரும்; அல்லார் செயும் கேண்மை - தீயார் செய்கின்ற நட்பானது, ஆகாது - நல்லதாகாது.

[க-உ] நல்லவருடைய நட்பு நாள்தோறும் வளர்ந்து நன்றாகும்; தீயவர் நட்பு அங்ஙனம் ஆகாது

தீயார் கேண்மை

39. கற்றறியார் செய்யும் கடுநட்பும் தாங்கூடி
உற்றுழியும் தீமைநிகழ் வுள்ளதே—பொற்றொடீஇ
சென்று படர்ந்த செழுங் கொடிமென் பூமலர்ந்த
அன்றே மணமுடைய தாம்.

[ப-உ] பொற்றொடீஇ - பொன்னாலாகிய வளையல்களை யணிந்த பெண்ணே! சென்று படர்ந்த செழுங் கொடி - போய்ப் படர்ந்த செழுமை வாய்ந்த கொடியின், மென்பூ - மென்மையான பூவானது, மலர்ந்த அன்றே மணமுடையதாம் - பூத்த அன்றைத்தினமே வாசனையுடையதாம்; (மறுநாள் வாசனை யில்லாததாம்) (அவ்வாறே) கற்றறியார் - (நூல்பல) கற்றறியாதவரோடு, செய்யும் - ஒருவன் செய்யும் (பகையே யல்லாமல்) கடு நட்பும் - மிகுதியாகிய சினேகிதமும், தாம் கூடி - (அக் கற்றறியாதவரோடு) தாம் சேர்ந்து, உற்றுழியும் - இருக்குமளவும் தீமை, நிகழ்வே உள்ளது - (அவர்க்குத்) தீமை தருவதாகவே யிருப்பதாம்; (கூடி இராதபோது தீமை தருவதில்லையாம்.)

[க-உ] பூத்த அன்றைக்கு மாத்திரம் பூ, வாசனை யுடையதா யிருந்து, மறுநாள் வாடிப் போகும்; அதுபோல் மூடர் நட்பு, ஆரம்பத்தில் நன்றாக இருப்பதுபோல்-தோன்றிப் பிறகு தீங்கை

கொற்றவனைக் காட்டிலும் கற்றவன் சிறப்புடையன்

40. பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங் கல்வி
மன்னும் அறிஞரைத்தாம் மற்றொவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அது புனையாக்
காணுங்கண் ஒக்குமோ காண்.

[ப-உ] பொன்னே - திருமகளைப் போன்ற பெண்ணே! மின்னும் - விளங்கும், அணிபூணும் - ஆபரணத்தை அணியும், பிறவுறுப்பு - (கை கால் முதலிய) மற்றைய அவயவங்கள், அது - அவ்வாபரணத்தை, புனையா - அணியாமல், காணும் - (தம்மைப்) பார்க்கின்ற, கண் - கண்களாகிய அவயவங்களுக்கு, ஒக்குமோ - ஒப்பாகுமோ? (ஒப்பாகாது; அதுபோல) பொன் அணியும் - பொன்னுபரணத்தை அணிகின்ற, வேந்தர் - அரசர், புனையா - அப் பொன் ஆபரணத்தை அணியாமல், பெருங் கல்வி - பெரிய கல்விப் பொருள், மன்னும் - நிலைபெற்றுள்ள, அறிஞரை - பண்டிதர்க்கு, ஒவ்வார் - ஒப்பாகார்.

தாம், மற்று, காண் என்பன அசைகள்.

அறிஞரை என்பது உருபு மயக்கம்.

[க-உ] அரசர்கள் எவ்வளவு சிறப்புடையவராயினும் அவர்கள் கற்றறிந்த வித்துவான்களுக்கு ஒப்பாகார்.

நன்னெறி மூலமும் விளக்க வுரையும் முற்றிற்று.

நீதிநூல் தொகை முதற் பாகம் முற்றும்